Regd. No. M. 4892

ரயிலிலிருந்து சாமான்களை எடுத்து வரவோ வெளியூர்களுக்கு சாமான்களை அனுப்பவோ நீங்கள் சிரமப்பட வேண்டாம். விவரங்களுக்கு எழுதுங்கள்.




மதராஸ் & தென் மராட்டா ரயில்வேக்கு லோகல் டெலிவரி கண்ட்ராக்டர்கள்

202-3, மவுண்டு ரோடு (போன் :-8536) மதராஸ்

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press,
116-119, Sladens Garden, Poonamalle High Road, Kilpauk, Madras.



வைரம்
பொன்
வெள்ளி
நகைகளுக்கு
P.A. ராஜ செட்டியார், பிரதர்
தந்தி: ராஜா-கோயமுத்தூர்-போன். 218A




# உங்கள் மனதிற்குகந்த நறுமணம் தொண்டைக்குக் கெடுதல் செய்யாது

டிலக்ஸ் டெனார் சிகரெட்டின் உண்மை மணத்தை நீங்கள் விரும்புவீர்கள். உயர்ந்ததும், அவசியமானதுமான பண்டங்கள் கிராக்கியாய் விற்கும் இந்நாளில் கூட இந்த சுகம் நிறைந்த சிகரெட்டுகள் நம்மில் பலர் வாங்கக்கூடிய விலைக்கே விற்கப்படுகின்றன. உத்தரவாதமுள்ள 100% வர்ஜீனியா புகையிலையிலிருந்து தயாரிக்கப்பட்டது டெனார் சிகரெட்டுகள்.

டி லக்ஸ் டெனார் சிகரெட்டு
ஜேம்ஸ் கார்ல்டன் லிட், லண்டன்

**tenor** is truly a de Luxe Cigarette

JAMES CARLTON LTD, LONDON.

# எங்கள் ஆபீஸ் விஷயம்

ராஜன்



ஆபீஸர்:—கீழே வேலை செய்பவர்களை ஆட்டி வைக்கப் பிறந்த தெய்வம். என்றாலும் இவரை ஆட்டி வைக்கப் பிறந்தவர்களும் உண்டு.

அகௌண்டண்ட்:—ஆபீஸில் தன்னைத் தவிர மற்றவர்க ளெல்லோரும் சோம்பேறிகள், உபயோகமற்றவர்கள் என்பது இவர் எண்ணம்.

குமாஸ்தா:—ஆபீஸ் மேஜை, நாற்காலிகளில் குடியிருக்கும் மூட்டைப் பூச்சிகளின் நிரந்தர சிநேகிதன். மேலதிகாரிகளின் கோபத்தையும் வசைமொழிகளையும் ஏற்றுக்கொள்வதற்கென்று பிறந்த பொறுமைப் பொக்கிஷம். ஆபீஸில் ஏற்படும் தவறுகளுக்கு மாத்திரம் காரணமாகக் காட்டப்படுபவர்.

காஷியர்:—மாதக் கடைசியிலும் இவர் பெட்டியில் நிறையப் பணமிருக்கும்; ஆனால் தனக்கென்று ஒரு அணுக்கூட செலவழிக்க மாட்டார்.

பியூன்:—கும்பகர்ணனின் கலியுக அவதாரம்.

அட ராமா!



ஹோட்டல்காரர்:—மறுபடியும் எதற்காக வந்தீர்கள்? இப்போதுதானே தாங்கள் மறந்து வைத்து விட்டுப் போன குடையை எடுத்துக்கொண்டு போனீர்கள்?

வந்தவர்:—ஆமாம்; குடையை எடுத்துப் போக வந்தபோது என் கைப்பிரம்பை வைத்து விட்டுப் போய் விட்டேன்.

பாட்டி:—பேரனுக்கு லீவு கிடைப்பதாயிருந்தால் எத்தனை தரம் வேண்டுமானாலும் சாகத் தயங்காத தியாகமூர்த்தி.

கடிகாரம்:—ஆபீஸ் ஆரம்பிப்பதற்கு முன் வேகமாகவும், முடியும்போது மெதுவாகவும் போவதாகத் தோன்றும் ஒருவித யந்திரம்.



ஆபீஸ் நேரம்:—இதற்குப் பிறகுதான் எல்லோரும் ஆபீஸுக்கு வருவார்கள்.

ஆபீஸ்:—மனைவிகளின் தொல்லையிலிருந்து புருஷர்களைக் காப்பாற்றும் ஒருவித 'ஷெல்டர்.'



மணி:—ஆபீஸரின் கோப நிலையைக் காட்டும் கருவி. பியூன்களைத் தூக்கத்திலிருந்து எழுப்பவும் இதை உபயோகிக்கலாம்.

குல்லாய்:—ஆபீஸில் நுழையும் வரை குமாஸ்தாவின் தலையில் இருக்கும் இது. பிறகு, ஆபீஸர் தலைக்கு மாற முயற்சிப்பதை நீங்கள் கேட்டிருக்கலாம்.

காண்டீன்:—மேலதிகாரிகளின் குணாதிசயங்கள் தாராளமாக அலசப்படும் இடம்.

கிம்பளம்:—ரகசிய ஆயுதம் வி—1; குறி தவறாது.

வேலைத் தொந்தரவு:—வேலைக் குறைவை மறைக்கும் 'காமப்ளேஜ்'; தபால் செலவு செய்ய விரும்பாதவர்கள் கடிதம் எழுதாததற்குக் கூறும் காரணம்.

வயிற்று வலி:—சீக்கிரம் வீட்டிற்குப் போக விரும்பும்போது தானாக வரும் வியாதி; ஆபீஸை விட்டுப் போக அனுமதி கிடைத்ததும் தானாகவே போய்விடும்.

தலைவலி - ஜுரம்:—ஆபீஸிற்கு 'மட்டம்' போட விரும்பும் தினத்திற்கு மாத்திரம் வரவேற்கப்படும் இரட்டை வியாதிகள்.

பொடி:—சுறுசுறுப்பை வரவழைப்பதற்காக ஆபீஸர் முதல் பியூன் வரை உபயோகிக்கும் ஓர் அபூர்வ சூரணம்; 'ஓசில்' வாங்கி உபயோகித்தால்தான் நிறைந்த பலன் கிட்டும் என்பவர் இதை ஆபீஸிற்குக் கொண்டு வர மாட்டார்கள்.



## கடவுளின் கோவிலுக்கான பரிசுத்தம்




தெய்வீகத்திற்குப் பரிசுத்தம் இன்றியமையாதது. மிகவும் சுத்தமளிக்கும் சடங்காச்சார ஸ்நானங்களுக்கு சுயமான ஸோப்பை மட்டுமே நாம் உபயோகிக்க வேண்டும். ஸோப்பில் ஏது கலப்பு மிருக்கலாம். ஆனால், கோத்ரெஜ் ஸாண்டலின் நன்மை தரும் கலப்பற்ற தாவர எண்ணெய்ச் சத்துக்களே, கோத்ரெஜ் சௌந்தரியப் பொருட்களெல்லாம் உள்ளன போன்று, நவீனமைப்பட உபயோகப்படுத்தப் பட்டுள்ளன. வெறுக்கத்தக்க மிருகக் கொழுப்புகள் யாதும் அவைகளில் இல்லை. சுய மைசூர் சந்தனத் தைலம் யதேஷ்டமாய்ப் பொருந்தப் பெற்ற கோத்ரெஜ் சந்தண ஸோப்பானது இன்பமான குளிர்மை, இதம், மணம் இவைகளையுடைய நுரையை யளிக்கும். எனவே, சரீரம் கடவுளின் கோவிலா யிருக்க, அதைத் தூய்மைப் படுத்த கோத்ரெஜ் தாவர வஸ்து ஸாண்டல் ஸோப்பல்லாது வேறெதுதான் ஏற்றதாகும்?



கோத்ரெஜ் லிம்டா: கிருமிகளைக் கொல்லவும் சொஸ்தமளிக்கவும் வல்ல வேம்பின் குணங்களையுடைய ஸோப்.

**Godrej Sandal**

# கோத்ரெஜ் சாவி மார்க் ஸாண்டல் (சந்தண) ஸ்நான ஸோப்

கோத்ரெஜ் ஸோப்ஸ், லிமிடெட்.,
மதராஸ் (164, பிராட்வே): கோயம்புத்தூர் (8. தாமஸ்வீதி)

---

சென்னைமா நகரில்
பிரசித்தமடைந்தது

## மயிலாப்பூர்

•

மயிலாப்பூரில் யாவருக்கும்
ஆனந்தக் காக்ஷி யளித்து
வருவது கபாலியின்
சன்னிதானம்

•

கோயிலின் சன்னதி வீதியில்
பிரசித்தமடைந்த

**ஆரணி ஸில்க் ஹவுஸில்**

கிருஸ்துமஸுக்காக ஸ்பெஷலாய் தயாரான நூதன ஜவுளி ரகங்கள் ஏராளமாக வந்து குவிந்துள்ளன.

•

நம்பிக்கைக்கும் உறுதிக்கும்
உத்தரவாத முள்ளது

•

யாவரும் விஜயம் செய்யுங்கள்!

# ஆரணி ஸில்க் ஹவுஸ்

நெ. 4, சன்னதித் தெரு,
மயிலாப்பூர் :: மதராஸ்

தடவை சங்கராபரணம் வாசித்த போது......" என்று தழதழத்த குரலில் சொன்னாள்.

"பரவாயில்லை. அந்த ராகம் வேண்டாம்" என்றேன்.

சில நிமிஷங்களுக்கெல்லாம் மனோ திடத்துடன் வில்லைக் கையில் எடுத்தாள். உயிருடனிருக்கும் சிநேகிதியைத் திருப்தி செய்வதற்காக இறந்த ஆத்மாவுக்கு அதிருப்தி யளிக்கத் துணிந்து விட்டாள். அழுத்தமாக வில்லைப் போட்டு வாசிக்க ஆரம்பித்தாள். சங்கராபரணம்!

கீழ் ஸ்தாயியில் வாசிக்கும் போதே புளகாங்கித மடைந்தேன். மத்யம ஸ்தாயியை அடைந்தவுடன் மெய்ம் மறந்து விட்டேன். பிர்க்காக்களை எப்படிக் கொட்டினாள்! என்ன கற்பனை! பாரிஜாத விருக்ஷத்தை உலுக்கினால் புஷ்பங்கள் உதிருவது போல் அனாயாசமாய் சுவை சங்கதிகள் விழுந்தன. மற்றொரு சமயம் கூழாங் கற்களுக்கிடையில் துள்ளிக் குதித் தோடும் அருவிபோலிருந்தது சங்கீதம். ஆனால் நிர்மலா சந்தோஷமோ, துக்கமோ ஒன்றும் காட்டிக் கொள்ளாமல் ஆவேசம் வந்தவள்போல் வாசித்துக் கொண்டிருந்தாள்.

மேல் ஸ்தாயியில் சஞ்சாரம் செய்து காந்தாரத்தில் கார்வை கொடுத்து நிறுத்தினாள். ஆஹா! அப்போது என் மனக் கண் முன் நிர்மலமான நீர் நிறைந்த பெரிய ஏரியில், சந்திரிகையின் பிரதிபலித்த ஒளியில், ஓர் சிறு படகு மெதுவாக அசைந்து செல்வதுபோல் தோன்றிற்று. பிறகு ஒரு பெரிய பிர்க்காவுக்காக வில்லை வீசிப் போட்டாள் நிர்மலா. 'டக்!'—தந்தி அறுந்து விட்டது!

"சபதத்தை மீறினேன். அபசாரம், அபசாரம்!" என்று அலறிக்கொண்டே பிடிலை வீசி எறிந்துவிட்டு அடுத்த அறைக்குள் போய்த் தாளிட்டுக் கொண்டாள். நன்றாய் உருவாகிக் கொண்டு வந்த சங்கீதச் சிலை நொடிப் பொழுதில் சுக்கு நூறாகப் போய்விட்டது! அவள் உள்ளமும் உடைந்து விட்டது!

அன்று கேட்ட மாதிரி சங்கராபரணம் என் ஆயுளில் நான் கேட்டதே யில்லை. முழுதும் வாசிப்பதற்குள் தந்தி அறுந்து விட்டது. ஆயினும் என்ன? முழுதும் கேட்கப்படாத சங்கீதமே சிறந்தது; பூர்த்தியாகாத கலையே மேலானது. முற்றிலும் முடித்து விட்டால், நம் கற்பனா சக்திக்கு வேலை வேண்டாமா?

அதற்குப் பிறகு நிர்மலா பிடில் வாசிப்பதையே அடியோடு விட்டுவிட்டாள்.

★

கதையைக் கூறி முடித்தாள் ராதா. அவள் கண்கள் கலங்கியிருந்தன.

"என்ன! சுத்தக் கோழையா யிருக்கிறாயே?" என்றேன் நான்.

"இதற்குத்தான் உங்களிடம் சொல்லத் தயங்கினேன். உங்களுக்கென்ன தெரியும்? வாழ்க்கையே நரகமாய்ப் போய்விட்ட நிர்மலாவுக்கு ஓரளவு மன அமைதியை அளித்து வந்த சங்கீதத்துக்கு நான் யமனாக வந்தேன். இதற்கு நான் என்ன பிராயச் சித்தம் செய்ய முடியும்? விட்டில் பூச்சி விளக்கில் மடிவது போலல்லவா அந்த சங்கராபரணத்துக்குத் தன் ஆத்ம சாந்தியையே பலி கொடுத்து விட்டாள் நிர்மலா? நான் ஏன் அந்த ராகத்தை வாசிக்கச் சொன்னேன்? அந்தப் பாழாய்ப் போன பிடில் தந்தி அப்போதுதானா அறுந்து போக வேண்டும்?" என்று கூறித் தேம்பித் தேம்பி அழுதாள் ராதா.

"சரி; அழாதே, அசடு!" என்றேன். ஆயினும், என் கண்ணீரை நான் துடைத்துக் கொண்டபோது அவள் பாராதவள் போல் பார்த்து விட்டாள்.

★

## ஏலம் போடுதல்

வெளியில் இருந்து வந்த பேரன் தன் செவிட்டுத் தாத்தாவைப்பார்த்து, "தாத்தா! நம்ம நிலத்தை ஏலம் போடுறாங்களாம்" என்றான்.

தாத்தா:—ஓகோ, அப்படியா! போன வருஷம் சோளம் போட்டாங்க: நல்லா விளையலே. அதனால்தான் இந்த வருஷம் ஏலம் போடுறாங்க போலிருக்கு.

## யாரைக் கண்டு பயம்?

"சப் கலெக்டர், டிப்டி கலெக்டர், ஜில்லா கலெக்டர் இவர்களில் யாரைக் கண்டாலும் எனக்குப் பயமில்லை."

"பின் யாரைக் கண்டால் பயம்?"

"பில் கலெக்டரைக் கண்டால் தான்!"



பிடில் வாசிக்காமல் என்னையே உற்றுப் பார்த்தாள். அப் பார்வையின் அர்த்தம் என்ன? 'இந்த ராகம் வேண்டாம்,' 'ஐயோ, இதை ஏன் பாடுகிறாய்?' என்று பல உணர்ச்சிகளை பிரதிபலித்தன அவள் கண்கள். நான் வேறு சில பாட்டுக்களைப் பாடிக் கச்சேரியை முடித்தேன். வீட்டுக்குப் போகுமுன் அவளை "ஏன் பிடில் வாசிப்பதை நிறுத்தினாய்?" என்று கேட்க வேண்டு மென்று நினைத்தேன். சந்தர்ப்பம் வாய்க்க வில்லை. மறுநாள் சிற்றுண்டி நேரத்தில் நிர்மலாவைச் சந்தித்தேன்.

"ஏண்டி, சங்கராபரணம் வாசிக்கவில்லை?" என்று கேட்டேன். பதில் பேசாமல் முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொண்டாள்.

"சொல்லக் கூடாதா?"

மௌனம்.

"நீ சொல்லாவிட்டால் விடமாட்டேன்" என்று கூறி அவள் பின்னலைப் பிடித்திழுத்தேன். நிர்மலா கண்ணீர் ததும்பிய கண்களால் என்னை நிமிர்ந்து பார்த்தாள். அவள் ஹிருதயம் துன்புற்றது போல் காணப் பட்டது.

"அது என்னைத் தனியே தவிக்கவிட்டுச் சென்ற ஆத்மாவுக்கு மிகவும் பிடித்த ராகம். அவர் இறந்தபின் நான் அந்த ராகம் வாசிப்பதே யில்லை" என்று கூறி அங்கிருந்து வேகமாய்ப் போய் விட்டாள்.

எனக்குத் தூக்கி வாரிப் போட்டது. இத்தகைய பதிலை நான் எதிர் பார்க்கவே யில்லை. என் மனம் வேதனைக் குள்ளாயிற்று. அவள் இதை என்னிடம் சொல்லாமலிருந்திருக்கக் கூடாதா? அன்றிரவு வெகு நேரம் வரை நிர்மலா, நான் கண்டிராத அவள் கணவன், சங்கீதம், இவைகளைப் பற்றிப் பலவாறாகச் சிந்தித்துக் கொண்டு விழித்திருந்தேன்.

இச் சம்பவத்துக்குப் பிறகு நான் நிர்மலாவை ஒரு குறிப்பிட்ட ராகம் வாசிக்கச் சொல்லுவதில்லை. ஆயினும், "எனக்குப் பிடித்த சங்கராபரணம் அவள் வாத்தியத்தில் வாசித்தால் எப்படி யிருக்கும்!" என்று எண்ணுவேன்.

**பி.** ஏ. பரீக்ஷை முடிவடைந்தது. பல ஊர்களிலிருந்து வந்து கூடியிருந்த மாணவிகள் ஒருவரிடமிருந் தொருவர் விடை பெற்றுக் கொண்டனர். நான் நிர்மலாவின் வீட்டுக்குச் சென்றேன். பல விஷயங்களைப் பற்றி வேடிக்கையாய்ப் பேசிக் கொண்டிருந்தோம். நாங்கள் பிரிய வேண்டியதைக் குறித்து மிகவும் வருந்தினாள் நிர்மலா. "வாழ்க்கையே ஓர் ரயில் பிரயாணந்தான், ராதா! இரு ஸ்டேஷன்களுக் கிடையில் சந்தித்து நண்பர்களாகிறோம். பிறகு அவரவர் இறங்க வேண்டிய ஸ்டேஷனில் இறங்கி நண்பர்களைப் பிரிந்து போய்விடுகிறோம்" என்றாள்.

"ஏது, பெரிய கவியாய்ப் போய்விட்டாயே? சரி, வா! கொஞ்ச நேரம் சங்கீத சாகரத்தில் அமிழ்ந்து கிடக்கலாம்" என்றேன்.

"ரொம்ப நாளாயிற்று. ஸாதகமே பண்ண வில்லை" என்று சொல்லிக் கொண்டே பிடில் பெட்டியைத் திறந்தாள். ஒன்றன் பின் ஒன்றாகப் பல ராகங்கள் வாசித்தாள். அன்று அவள் வாசித்த ரீதிகௌளை அதி மானுஷ்யமா யிருந்தது. என்ன நயம்! என்ன பாவம்! தேவகானம் போலிருந்தது.

"உனக்கு ஏதாவது விசேஷமாக வேண்டுமா?" என்று கேட்டாள். நான் ஒன்றும் பேசாமல் அவளையே பார்த்துக் கொண்டிருந்தேன். அவள் அறிந்து கொண்டாள்.

"சங்கராபரணம்தான் வேண்டுமோ?" நான் தலையை அசைத்தேன்.

"ராதா, நான் எப்படியடி அந்த ராகத்தை வாசிப்பேன்......நீ உட்கார்ந்து கொண்டிருக்கும் அதே இடத்தில்தான் அவர் உட்கார்ந்திருந்தார் — நான் கடைசித்

# சங்கராபரணம்

கே. எஸ். ஸ்ரீனிவாஸன்

ராதா பி. ஏ. பட்டம் பெற்றிருந்த போதிலும் அவளுடைய சங்கீதத்தில் ஈடுபட்டுத்தான் நான் அவளை மணந்தேன். மெல்லிய குரலில் அழுத்தமாக அவள் பாடுவதைக் கேட்டு, சங்கீதத்தில் பிரேமை கொண்ட நான் பெரிதும் மகிழ்வடைந்தேன். 'நான் பாக்கியசாலி' என்றெண்ணிப் பெருமை கொண்டேன்.

ஆனால் ஒரு விஷயம் எனக்கு மிகவும் ஆச்சரியத்தை விளைவித்தது; விவாகமாகி ஒரு வருஷமான பின் கூட அதற்குக் காரணம் தெரியவில்லை. ராதாவுக்குச் சங்கராபரண ராகமும், பிடில் வாத்தியமும் கொஞ்சம்கூடப் பிடிக்காது. ஏன் என்று என்னால் அறிந்து கொள்ள முடியவில்லை. "'அக்ஷய லிங்க விபோ' என்னும் கீர்த்தனம் பாட மாட்டாயா? எனக்கு ரொம்பப் பிடிக்கும்" என்று நான் பல முறை கேட்டுக்கொண்டும், "அது வேண்டாம்; வேறு ராகம் ஏதாவது கேளுங்கள்" என்று நயமாகவும், ஆனால் உறுதியுடனும் பதிலளிப்பாள். எனக்கு இதன் மர்மம் புரியவேயில்லை. ஒரு நாள் மிகவும் நிர்ப்பந்தப்படுத்தி அந்த மர்மத்தைக் கூறும்படி கேட்டேன். "அது ஒரு பெரிய கதை" என்று பின்வரும் கதையைச் சொன்னாள்.

★

நான் கலாசாலையில் படித்துக் கொண்டிருந்த போது என்னுடன் நிர்மலா என்றொருத்தி படித்தாள். அவள் ஒரு விதவை; என்னை விடச் சற்று வயதானவள். கல்யாணமாகிச் சில மாதங்களுக்கெல்லாம் கணவன் இறந்து விட்டாராம். முன்னமேயே எஸ். எஸ். எல். ஸி. வரை படித்திருந்தாளாகையால், மன வேதனையை மறப்பதற்காகக் கலாசாலையில் சேர்ந்தாள்.



நிர்மலா ரொம்ப நல்ல பெண், ஸாது; அடக்கமாயிருப்பாள். ஒருவருடனும் அதிகமாய்ப் பேச மாட்டாள். தன் நிலைமையினால் தன்னைத் தாழ்ந்தவளென்று எண்ணிக் கொண்டாளோ என்னமோ தெரியாது.

எங்களிருவரையும் பிணைத்தது சங்கீதம். அவள் நன்றாய் பிடில் வாசிப்பாள். முதல் நாளே அவள் வாசிப்பைக் கேட்டுப் பிரமித்து விட்டேன். என்ன ஞானம்! என்ன பாணி! விரல்களில் என்ன வாகவம்! அதற்குப் பிறகு நாங்களிருவரும் சங்கீதாபிமானிகளென்ற முறையில் அடிக்கடி சந்திக்கலானோம். சில சமயம் நான் பாடுவேன். அவள் பிடில் வாசிப்பாள். ஆனால் அவளைத் தனியாக வாசிக்கச் சொல்லிக் கேட்பதில் எனக்குப் பேரானந்தம்.

அப்போதெல்லாம் எனக்குச் சங்கராபரணம் என்றால் உயிர். ராகங்களில் மிகச் சிறந்தது அதுவே என்று எண்ணியிருந்தேன். ஒரு நாள் கலாசாலையில் நடந்த கச்சேரியில் அவள் எனக்குப் பக்க வாத்தியம் வாசித்துக் கொண்டிருந்தாள். நான் 'ஸ்வர ராக ஸுதா' என்று ஆரம்பித்தேன். அவள்

# கடன் கொடுத்தவர்

சி. ரா.

வீட்டுக்காரர் அன்று ஆறாவது தடவையாக ஆறுமுகத்தினிடம் வீட்டு வாடகை கேட்க வந்தார். ஆறுமுகம் அவருக்கு இரண்டு மாத வாடகை பாக்கி. அவனுடைய ஜன்மத்தில் இப்படி நேர்ந்ததே யில்லை.

வீட்டுக்காரருக்கு அவன் ஐந்து தடவை சால்ஜாப்பு சொல்லியது ஒரு பெரிய அதிசயம் என்றே சொல்ல வேண்டும். அவ்வளவு அப்பாவி! அவரும் கண்டிப்பான மனுஷர்!

ஆறாவது தடவை ஆறுமுகத்தினிடம் வந்து விடவே அவனுக்குக் கஷ்டமாகி விட்டது. நல்ல காலம்! ஒரு யோசனையும் தோன்றியது.

"ஸார்! பணம் வந்து விட்டது. ஆனால் என் நண்பர் ஒருவர் மிகவும் அவசரம் என்று வாங்கிக் கொண்டு போனார். நாளைக்கே தருவதாகச் சொல்லி யிருக்கிறார்" என்றான் ஆறுமுகம்.

"நாளைக்குக் கண்டிப்பாகக் கொடுத்து விடுவாயல்லவா?" என்று வீட்டுக்காரர் முகத்தைச் சுளித்துக் கொண்டு, சொல்லி விட்டுப் போனார்.

"சனி தொலைந்தது" என்று சந்தோஷப் பட்டான் ஆறுமுகம்.

* * *

மறுநாள் வீட்டைப் பூட்டிக் கொண்டு வெளியே கிளம்பிவிட்டான் ஆறுமுகம். அன்று வீடு திரும்புவதில்லை என்று உத்தேசித்திருந்தான். அந்த வீட்டுக்காரர் நன்றாக ஏமாறட்டும் என்பது அவன் எண்ணம்!

ஆனால் அவன் நினைத்தபடி நடக்கவில்லை. நடுவழியிலேயே அந்தப் பாவி மனிதர் வந்து விட்டார்!

"என்ன, ஆறுமுகம்! எங்கே போகிறாய்?" என்று அவனைப் பிடித்துக் கொண்டார்.

ஆறுமுகம் சாதுரியமாக, "உங்களுக்காகத்தான் என் நண்பரிடம் போய்க் கொண்டிருக்கிறேன். சாயங்காலம் வீட்டுக்கு வந்தீர்களானால் தந்து விடுகிறேன்" என்றான்.

"எனக்கு அவசரமாகப் பணம் வேண்டியிருக்கிறது. உன்னுடன் நானும் வருகிறேன்" என்று கூறி அவனைப் பின் தொடர்ந்தார் அந்தப் பொல்லாத வீட்டுக்காரர். 'தலை விதியே!' என்று மூக்கால் அழுத வண்ணம் முன்னே சென்றான் ஆறுமுகம்.

திடீரென்று ஒரு ஆசாமி எதிரே தென்பட்டார். அவரைப் பார்த்ததும் பயந்து போய்ப் பதுங்கலானார் வீட்டுக்காரர். ஆறுமுகத்தினிடம், "நான் சாயங்காலம் வீட்டுக்கே வருகிறேன்" என்று சொல்லி விட்டு, அவர் வந்த வழியே திரும்பப் பார்த்தார்.

விஷயத்தைப் புரிந்து கொண்ட ஆறுமுகம், "பரவாயில்லை, ஸார்! இப்பொழுதே வாங்கித் தந்து விடுகிறேன், வாருங்கள்!" என்றான். ஆனால் அவனுடைய வார்த்தையைக் கேட்டுக் கொண்டு அங்கே நிற்க அந்த வீட்டுக்காரருக்குப் பைத்தியமா, என்ன? கடன்காரன் எதிர்ப்பட்டால் தைரியத்துடன் எதிர் நோக்கும் கடன் பட்டவரும் உண்டோ இந்தப் பரந்த உலகில்?

## அதற்குத்தான்!



ஒரு மோட்டார் ஓட்டி ரயில்வே கேட்டில் காரை முட்டி விட்டான். பக்கத்திலிருந்த கேட் கீப்பர் கோபத்துடன், "ஏன், ஐயா! கேட் மூடி யிருக்கிறதே, கண் தெரிய வில்லையா? காரை நிறுத்தினால் என்ன ஐயா?" என்று கேட்டான்.

டிரைவர்:—சத்தம் போடாதே, அப்பா! காரை நிறுத்துவதற்குத்தான் கேட்டிலே முட்டினேன்!




இந்தப் பையனுக்கு உள் நாட்டிலும் வெளி நாட்டிலும் உயர்ந்த கல்வி புகட்டப்பட்டு இன்று உன்னத ஸ்தானத்தில் இருக்கிறான். இது எவ்வாறு முடிந்ததென்றால் அவனது தகப்பனாரின் முன் யோஜனைதான். இவனுக்காக அவர் படிப்பு, ஆயுள் சம்பந்தமான இன்ஷ்யூரன்ஸ் பாலிஸிகள் எடுத்திருந்தார்.

உங்களது பையனுக்கு நீங்கள் என்ன செய்யப் போகிறீர்கள்?

**நேஷனல்**

இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி லிமிடெட்

● ● ● ●

நெருப்பு, விபத்து, மோட்டார், மற்றும் சகலவிதமான இன்ஷ்யூரன்ஸுக்கும்

நேஷனல் பயர் அண்டு
ஜெனரல் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி லிமிடெட்
7, கௌன்ஸில் ஹௌஸ் தெரு, கல்கத்தா.

மதராஸ் பிராஞ்சு:
"நேஷனல் இன்ஷ்யூரன்ஸ் பில்டிங்"
362, சைனா பஜார் ரோடு, எஸ்பினேனேட்

சப் ஆபீஸ்கள்:
பெங்களூர் :: மதுரை.



## ஜுரத்தில்

உஷ்ணம் 102 டிக்ரிக்கு மேலே போனால், உங்கள் கூந்தல் உதிர்வது நிச்சயம். அம்மையானாலும் சரி, 'டைபாயிட்' 'மலேரியா' 'இன்புளுயன்ஸா' முதலிய விஷ ஜுரங்களானாலும் சரி, சூடு காரணமாகவே மயிர் அபரிமிதமாகக் கொட்டுகிறது. ஜுர ஸமயங்களில் உஷ்ணம் அதிகமாக ஏறா விடினும், மயிர் உதிர்வது மட்டும் தவறுவதே யில்லை. அப்படி உதிரும்போது தக்க சிகிச்சை செய்து தடுக்காம லிருந்து விட்டால், மயிர் விடாமல் உதிர்ந்து தலையும் வழுக்கையாய் விடும்.

வெள்ளம் வந்த பிறகு அணையிடுவதேன்? மயிர் உதிர ஆரம்பிக்கு முன்னரே, கூந்தலைக் காப்பாற்றிக் கொள்ளுங்கள். ஜுரத்துக்குப் பிறகு கேசம் அரை பங்கு கால் பங்காகக் குறைந்து விட்டால், கேசவர்த்தினியைக் கொண்டு கேசத்தை விருத்தி செய்து பூர்ணமாக்கிக் கொள்ளுங்கள். கடைசியாக எல்லாப் பரீக்ஷைகளும் செய்தான பிறகு கேசவர்த்தினியே கூந்தலுக்குச் சிறந்தது என்று தெரிய வந்தால், கேசவர்த்தினியை முதலிலேயே கைக்கொள்ளலாமே?

# கேசவர்த்தினி

கூந்தலைப் பாதுகாப்பது, விருத்தி செய்வது, அழகு படுத்துவது.

**விலை அணா 12.**

(மேற் செலவு வேறு)

எல்லாக் கடைகளிலும் கிடைக்கும்

தயாரிப்பவர்:

தென் இந்திய ரஸாயனசாலை,
ஆர். எஸ். புரம், கோயமுத்தூர்

No. 6.

இந்தச் சம்பாஷணையைக் கேட்டுக் கொண்டிருந்த செல்வரத்தினம் பிள்ளை அன்று இரவே வருத்தத்துடன் சென்னைக்குத் திரும்பிச் சென்று விட்டார்.

★

மறு நாள் கல்யாணப் பேச்சை ஆரம்பித்தபோது, "நான் அநஸூயாவைத் தான் கலியாணம் செய்து கொள்வேன்!" என்றான் அருணாசலம்.

"இல்லை; நீ சுசீலாவைத்தான் கலியாணம் செய்து கொள்ள வேண்டும்!"

"அம்மா! நீங்கள் எதைச் சொன்னாலும் கேட்கிறேன். ஆனால் என் கலியாண விஷயத்தில் மட்டும் தலையிடாதீர்கள்."

"எனக்குப் பிடிக்காத பெண்ணை நீ கலியாணம் செய்து கொள்ளக்கூடாது!"

"பெண் எனக்குத்தானே பிடிக்க வேண்டும், அம்மா! நல்லதோ, கெட்டதோ நான் தானே கடைசி வரையில் அனுபவிக்கப் போகிறவன், அம்மா! இந்த விஷயத்தில் மட்டும் என் இஷ்டத்துக்கு விடுவதில் என்ன சிரமம், அம்மா!" என்று மனமுருக வாதாடி நின்றான் அருணாசலம்.

"உன் இஷ்டத்துக்கு விடுவதற்கு, 'அம்மா' என்று நான் ஒருத்தி ஏன் இருக்கிறேன்?"

"கோபித்துக் கொள்ளாதீர்கள், அம்மா! அநஸூயாவுடனும் பழகியிருக்கிறேன்; சுசீலாவுடனும் பழகியிருக்கிறேன். அநஸூயாவிடம் இருக்கும் அன்பு, பெருந்தன்மை ஒன்றும் சுசீலாவிடம் கிடையாது. அம்மா! அநஸூயாவுக்கு உன் மேல் எவ்வளவு பிரியம் தெரியுமா?"

"என் அண்ணன் மகளைவிடவா அவளுக்கு என்னிடம் பிரியம்?"

உண்மையில் அவளுக்கு சுசிலாவைப் பிடிக்காதுதான். இருந்தாலும் தன் சொத்தையெல்லாம் தன் தமையன் மகளே அனுபவிக்க வேண்டும் என்ற ஆசையில்தான் அவள் தன் மகனுடைய அருமையான வாழ்க்கையை மறந்து விட்டாள்.

"கலியாணம் செய்து கொள்ளப் போகிறவன் நான்தானே, அம்மா!"

"ஓஹோ! இவ்வளவு தூரம் பேச ஆரம்பித்து விட்டாயா? அவள் அடி எடுத்து வைத்தால் நான் இந்த வீட்டிலேயே இருக்க மாட்டேன்!"

"அம்மா! நீங்கள் இந்த வீட்டை விட்டுப் போக வேண்டாம். நானே போகிறேன்" என்று சொல்லிவிட்டு வேகமாக வெளியே போய்விட்டான் அருணாசலம்.

என்ன இருந்தாலும் பெற்ற மனமல்லவா? "அருணாசலம்! அருணாசலம்!!" என்று கூப்பிட்டுக் கொண்டே ஓடினாள். வழியிலிருந்த வாசற் படியில் தடுக்கிக் குப்புறக் கீழே விழுந்து மூர்ச்சையானாள். ஊர் முழுவதும் கூடி விட்டது. மூலைக்கு ஒரு ஆள் அருணாசலத்தைத் தேடிக் கொண்டு புறப்பட்டு விட்டனர். ரயிலடியில் அருணாசலத்தைக் கண்ட ஒருவர் விஷயத்தைச் சொல்லி அழைத்துக் கொண்டு வந்தார்.

அடுத்த முகூர்த்தத்தில் அருணாசலத்தின் இஷ்டப்படியே, அவனுக்கும் அநஸூயாவுக்கும் விவாகம் நடந்தேறியது.

★

அன்றிரவு, "அநு! உன்னையும் என்னையும் சேர்த்து வைத்த பெருமை யாருக்குத் தெரியுமா?" என்று கேட்டான் அருணாசலம்.

"இது தெரியாதா? அந்தப் பெருமை கடவுளுக்குத்தான்!"

"அந்தக் கடவுள் இந்தக் கடிதமாக அவதாரம் எடுத்துத்தான் நம்மைச் சேர்த்து வைத்தார்!" என்று அவளிடம் ஒரு கடிதத்தைக் கொடுத்தான் அருணாசலம்.

அதுதான் அவனுடைய அன்னையின் கடிதம்:

சிரஞ்சீவி தம்பி செல்வரத்தினம் பிள்ளைக்கு ஆசீர்வாதம்.

எப்படியாவது அருணாசலத்தைப் பட்டணத்துக்கு அழைத்துக் கொண்டு போய்ச் சுசீலாவை அவனுக்குக் கலியாணம் செய்துவைக்க ஏற்பாடு செய்யவும். அவன் அநுஸூயாவின் மேல் கண் வைத்திருக்கிறான். அவருக்கும் தன் பிள்ளைக்கு அநுஸூயாவைத்தான் கலியாணம் செய்து வைக்க வேண்டுமென்று ஆசை. அதற்காக அவர் அருணாசலத்துக்கும், அவன் அத்தைக்கும் எழுதிய கடிதங்களையெல்லாம் நான்தான் ஒழித்து எறிந்துவிட்டேன். இந்த விஷயத்தில் நீ பாரா முகமாயிருந்தால் அவருடைய சொத்தெல்லாம் அருமை தங்கைக்கும் அவள் பெண்ணுக்கும்தான் போய்ச் சேரும்!"

இப்படிக்கு,
அபிராமி.

ஏற்பட்டது. பட்டணத்துப் பெண் சுசீலா எங்கே? பட்டிக்காட்டுப் பெண் அநஸூயா எங்கே?

அருணாசலம் பழைய அருணாசலமாகவே இல்லை. அவன் ஹாட்டையும் பூட்டையும் பார்த்தால் நேரே சீமையிலிருந்து அப்பொழுதுதான் வந்தவன்போல் தோன்றியது. இந்த மாதிரி நாகரிக மனிதனைத் தன்னை மாற்றிய மாமாவை அவன் மனதாரப் புகழ்ந்தான். அந்த மகிழ்ச்சியில் அவன் அநஸூயாவையும் அத்தையையும் அடியோடு மறந்தான்.

ஒரு நாள் காலேஜிலிருந்து அவசரம் அவசரமாக ஓடி வந்தான் அருணாசலம். "அப்பாவுக்கு அபாயமாம். உடனே புறப்பட வேண்டும். தந்தி வந்திருக்கிறது!" என்றான்.

அடுத்த நிமிஷத்தில் எல்லோரும் ஆக்கூருக்குப் பிரயாணமாயினர்.

அருணாசலம் வரும் வரையில் பேசிக் கொண்டிருந்த அமிர்தலிங்கம் பிள்ளைக்கு இப்பொழுது பேசவே முடியவில்லை. எவ்வளவோ சிரமப்பட்டுப் பேச முயன்றும் முடியவில்லை. கடைசியில் தன் அருகில் நின்று கொண்டிருந்த செல்வரத்தினம் பிள்ளையைக் கூப்பிட்டுத் தன் பிள்ளையின் கையைப் பிடித்து அவரிடம் கொடுத்தார். திணறிக் கொண்டே, "இவனை நீதான் காப்பாற்ற வேண்டும்" என்று சொல்லி விட்டுக் கண்ணை மூடினார்.

அப்பொழுது கோடை விடுமுறை யாகையால் அருணாசலம் ஆக்கூரிலேயே தங்கி விட்டான்.

★

கோடை விடுமுறை கழிந்ததும், செல்வரத்தினம் பிள்ளை, "உடனே புறப்படு!" என்று அருணாசலத்துக்குத் தந்தி அடித்தார். அந்தத் தந்தியைப் படித்துப் பார்த்ததும் கிழித்துக் கீழே போட்டு விட்டான் அருணாசலம். அத்துடன் நில்லாமல், "மேல் படிப்பு வேண்டாம்; நான் பட்டணம் வரப் போவதில்லை!" என்று ஒரு தந்தியையும் அடித்து வைத்தான்!

அருணாசலத்தின் மேற்படி மன மாறுதலுக்குக் காரணம் என்ன? — சென்னையில் படித்துக்கொண்டிருந்த போது, அவனுடைய அன்னையிட மிருந்து செல்வரத்தினம் பிள்ளைக்கு வந்திருந்த ஒரே ஒரு கடிதத்தை அவன் தற்செயலாகப் பார்க்க நேர்ந்ததுதான்.

தந்தி போய்ச் சேர்ந்ததோ இல்லையோ, செல்வரத்தினம் பிள்ளை ஆக்கூருக்கு ஓடோடியும் வந்தார். அவரைப் பார்த்த அருணாசலத்துக்கு ஒன்றும் புரியவில்லை.

சிறிது நேரம் யோசித்தான். "நான் மாயவரம் போய் அத்தையைப் பார்த்து விட்டு வருகிறேன்" என்று தன் தாயாரிடம் சொல்லிவிட்டுக் கிளம்பினான்.

"இதைக் கேட்டுவிட்டுப் போயேன்!" என்றாள் அவன் தாயார்.

பேசாமல் மௌனமாகவே திரும்பி வந்தான் அருணாசலம்.

"பட்டணத்திலிருந்து மாமா வந்திருக்கிறார். அவரிடம் ஒன்றுமே பேசாமல் எங்கேயோ போகிறேன் என்கிறாயே, நன்றாயிருக்கிறதா?" என்றாள் தாயார்.

"அவர் வந்திருந்தால் நான் என்ன செய்யவாம்?" என்றான் அருணாசலம்.






மாயவரத்தில் தன் அத்தை வீட்டில் இருந்து கொண்டு அருணாசலம் படித்துக் கொண்டு இருந்தான். அவனுடைய அத்தை மகள் அநுஸூயாவும் அவனுடனேதான் படித்து வந்தாள்.

இவர்கள் இருவரையும் சிங்காரித்துப் பள்ளிக்கூடத்துக்கு அனுப்பிவிட்டு, அருணாசலத்தின் அத்தை வாசலில் நின்று கொண்டு குழந்தைகளைப் பார்த்துப் பூரித்துப் போவாள். "அநுஸூயாவுக்கும் அருணாசலத்துக்கும் என்ன பொருத்தம்! ஆகா! இவர்கள் இருவரையும் இளம் வயதில் சேர்த்து வைத்த கடவுள், அவர்கள் வாழ்க்கை முழுவதும் பிரியாமல் இருக்கும் படி செய்யமாட்டாரா?" என்று ஏங்குவாள்.

உடனே தன் அண்ணன் அமிர்தலிங்கம் பிள்ளையின் நினைவு அவளுக்கு வந்துவிடும். "ஐயோ! என்னுடைய அண்ணாவா என் பெண்ணைத் தன் மருமகளாக ஏற்றுக் கொள்ளுவார்? அவர் எங்கே, நான் எங்கே? லக்ஷாதிபதியின் பிள்ளை இந்த ஏழையின் மகளைக் கல்யாணம் செய்து கொள்ளுவானா? குழந்தைதான் சம்மதித்தாலும் அண்ணா ஒத்துக் கொள்ளுவாரா?" என்று தனக்குள்ளேயே எண்ணி எண்ணி ஏங்குவாள்.

அநுஸூயாவுக்குத் தினம் அருணாசலம் தான் பாடம் சொல்லிக் கொடுப்பான். அவள் அடி வாங்காமல் ஒரு நாள்கூடப் பாடம் சொல்லிக் கொண்டதே கிடையாது. அவன் அநுஸூயாவை அடிப்பது அருணாசலத்தின் அத்தைக்கும் தெரியாமலில்லை. ஏதாவது சொன்னால் பணக்கார வீட்டுப் பிள்ளை கோபித்துக்கொள்வானே என்று பயந்தாள்.

"அம்மா! அத்தான் அடித்தான் என்று கோவிச்சுக்காதே. நீ நன்றாகப் படிக்கணும் என்றுதானே உன்னை அடிக்கிறான்? அவன் கோவிச்சுக்கிட்டு ஊருக்குப் போய்விட்டால் நாம் சாப்பாட்டுக்கே கஷ்டப் படுவோம். அத்தான் இங்கே இருக்கிறான் என்றுதான் மாமா மாசம் பிறந்தால் பணம், அரிசி எல்லாம் அனுப்புகிறார்" என்று தன் மகளைத் தனியாக அழைத்துச் சொல்லி வைப்பாள்.

குழந்தை அநுஸூயாவுக்கு இதெல்லாம் எங்கே தெரிகிறது? அத்தான் அடித்தால் அம்மா கண்டிப்பதில்லை என்று தெரிந்ததும் அவள் அத்தானைக் கண்டதும் பயந்தாள். ஆனால் அடிக்கிற சமயத்தில்தான் அருணாசலத்தைக் கண்டு பயப்படுவாளே ஒழிய, மீதி நேரங்களில் அத்தானுடன் கொஞ்சினால்தான் அவளுக்குத் திருப்தியாயிருக்கும்.

★

எஸ். எஸ். எல். ஸி. பரீட்சை எழுதிவிட்டுக் கோடை விடுமுறையில் தன் தந்தையைப் பார்ப்பதற்காக ஆக்கூருக்குப் போயிருந்தான் அருணாசலம். அங்கே அவனுடைய தாய் மாமன் செல்வரத்தினம் பிள்ளை வந்திருந்தார். மேல் படிப்புக்காகத் தன் வீட்டிலேயே இருந்துகொண்டு படிக்கட்டும் என்று ஊருக்குப் போகும்போது அருணாசலத்தையும் சென்னைக்கு அழைத்துக்கொண்டு போய் விட்டார் செல்வரத்தினம் பிள்ளை. தன் மனைவி அபிராமியின் வற்புறுத்தலுக்கு இணங்கி, அமிர்தலிங்கம் பிள்ளையும் அதற்குச் சம்மதித்தார்.

செல்வரத்தினம் பிள்ளை பட்டணத்தில் பெரிய இரும்பு வியாபாரி. அவர் தம்முடைய மகளை எப்படியாவது அருணாசலத்துக்குக் கொடுத்து, அவனுடைய சொத்துக்களெல்லாம் தம் மகளை ஏகபோக உரிமைக்காரியாக்க வேண்டும் என்பது அவருடைய ஆசை. அவரது அக்காவான அபிராமியின் ஆசையும் அதுதான்.

செல்வரத்தினம் பிள்ளையின் மகள் கமலாவைப் பார்க்கும் போதெல்லாம் அருணாசலத்துக்கு அநுஸூயாவின்மேல் வெறுப்பு

# கொஹிமா சரித்திரம்




டோஜோவின் சைன்யங்கள் சின்ட்வின் நதியை கடந்துவிட்டன. மெதுவாகவும், திருட்டுத்தனமாகவும் அவர்கள் ஊர்ந்தேறி, நாகா மலைகளை அடைந்தனர். அவர்கள் கொஹிமாவைச் சுற்றியுள்ள சில மலைவரிசைகளை கைப்பற்றினர். நாகர்கள் தம் கிராமங்களிலிருந்து துரத்தப்பட்டனர். அவர்களது வீடுகள்கொளுத்தப்பட்டு, குடிசைகள் தரைமட்டமாக்கப்பட்டன. அவர்களுடைய பன்றி, கோழி வகைகள், தானியங்கள் எல்லாம் கொள்ளை யடிக்கப்பட்டன. ஜப்பானியர்கள் இந்தத் தாக்குதலை "இந்தியாவின்மேல் படையெடுப்பு" என்று கூறினர்.

சம்பவங்கள் விரைவாக நிகழ்ந்தன. ஜெயில் மலை, ஜி.பி.டி. காடு, எப்.டி.எஸ். காடு, பிம்பின் கடையோரம் டி.சி. பங்களா இப்பெயர்கள் ஞாபகத்திலிருக்கும். அது ஒரு கடுமையான சண்டை.

ஆனால் நம்மவர்கள் தம்மைவிட அதிக எண்ணிக்கை கொண்ட எதிரிகளின் தாக்குதல்களைத் தடுத்ததுமட்டுமல்லாமல் அவர்களை முறியடித்து மகத்தானதோர் வெற்றியையும் அடைந்தனர்.

இதுதான் கொஹிமாவின் சரித்திரம்.
இங்கு நமது மனிதர்கள் நிரூபித்தது........

**"நாம் ஜப்பானியர்களைத் தோற்கடிக்கக்கூடும் நாம் அவர்களைதோற்கடித்து வருகிறோம்"**



**தேசியப் போர்முனையின் பிரசுரம்**

# பாரதியார் ஞாபகார்த்த நிதி

சென்ற இதழில் கண்டிருந்தபடி கண்டி பாரதி அபிமானிகள் ஸ்ரீ பொ. த. கர்வாலிய மூலம் அனுப்பிய ரூ. 545—0—0-க்கு விவரம் :

ஸ்ரீ ச. அ. செல்லையா தமேல், கண்டி ரூ. 50; கோசி ஸ்டோர்ஸ், பாரதி அபிமானிகள் கண்டி ரூ. 16—8—0; மதராஸ் பனயகாட் கம்பெனி, கண்டி ரூ. 15; வகமால்ஸ், கண்டி ரூ. 15; ஹாஜி ஆதம் ஹாஜி மூசா அண்டு சன்ஸ். ரூ. 15; பெரி. சின்னக்கருப்பன் யாதவர், கண்டி ரூ. 11.

ரூ. 10—8—0 நன்கொடை : ஸ்ரீ எஸ். பி. கே. சுப்பையா பிள்ளை அண்டு பிரதர்ஸ், சாரதா ஸ்டோர்ஸ்; ராஜா ஸ்டோர்ஸ்; சி.ஜ. கே. கந்தசாமி செட்டியார்; எம். ஜெ. கஸ்பார் பெர்ணாந்து; ஹாஜி சுஹமத்துல்லா அண்டு பிரதர்ஸ்; பி. ஓ. எ. ஹாஜா முகைதீன் அண்டு கம்பெனி, கண்டி 7.

ரூ. 5—0—0 ஸ்ரீமான்கள் ஜெக்டர் சி. விஜரத்ன, ஏ. எச். சல்மன், எஸ். குன்னி செட்டியார் அண்டு கம்பெனி, கே. ஆர் எஸ். பி. கருப்பையா பிள்ளை அண்டு கோ, கே. பி. எஸ். டி. ஆண்டியப்ப பிள்ளை அண்டு கம்பெனி, எஸ்.பி.எஸ். சிதம்பரம் பிள்ளை அண்டு கம்பெனி, சுந்தரம் அண்டு கம்பெனி, எஸ். கே. எஸ். இபுராஹிம் பிரதர்ஸ், ஏ. பி. ஜோசப்பன் அண்டு கம்பெனி, ம. சவுண்டய்யா, ஜி. ஆர். ராஜபிரியர், வி. கே. எம். சிவக்கொழுந்து, எஸ். கே. வேலாயுத முதலியார், டி. வி. ஆர். எம். ராமசாமி செட்டியார், எஸ். எம். எஸ். வி. சேவுகன் செட்டியார், எஸ். வி. என். நாகப்ப செட்டியார், மஜீதியா ஸ்டோர்ஸ், எம். ஏ. எஸ். முகைதீன் அண்டு கம்பெனி, எஸ். ஏ. எம். எச். அப்துல் காதர் சாஹிப் அண்டு கோ. (மவுலானு), ஆதம்பாய் அண்டு சன்ஸ், சென்ட்ரல் மெடிக்கல் ஸ்டோர்ஸ், தாஞ்சி அண்டு கம்பெனி, ஜி. சித்தா, நேஷனல் பூட் எம்போரியம், என். கனகநாயகம் ஜெ. பி. டப்ளியூ. டிலெய். தாம்பண்டி எஸ்டேட், பேராதனியா.

கே. ஏ. எம். பி. மீரா சாயபு அண்டு பிரதர்ஸ், கண்டி. 4 0 0

ரூ. 3—0—0 ஸ்ரீ பி. ஜி. கோமஸ் அண்டு கம்பெனி, ஆசை வில்லவ ராயர், பேஸ்வி ஹவுஸ், வி. ஓ. குப்புசாமி செட்டியார், மெ. பெரி. மெ. ராமநாதன் செட்டியார், கே. எஸ். கே. சபாபதி பிள்ளை, ஜி. ஒய். சகாயம்; என். எம். முனிசாமி, கே. எஸ். கே. பிரதர்ஸ்.

ரூ. 2—8—0 ஸ்ரீமான்கள் டி. எம். பி. காதர், டி. எச். பி. காதர், கு. சி. ராஜரத்னம் ஜி. கே. குமாரசாமி, ஓ. ஜி. குலாம் முகம்மது மாஸ்டர் டெய்லர், பேராதெனியா.

ரூ. 2—0—0 ஸ்ரீமான்கள் ஆர். எஸ். டி. ராஜ பாண்டிய நாடார், டஸ்வானிஸ், கே. என். முகம்மது பிரதர்ஸ், கே. எம். முகைதீன், சென்ட்ரல் ஸ்டோர்ஸ், எம். நுகுமான், பி. ஏ. ஹாஜா முகைதீன் அண்டு கம்பெனி, கே. எஸ். முகம்மது. எம். கே. ஏ. முகைதீன் சாகுல் ஹமீது. ஏ. சின்னையா பிள்ளை, எஸ். ஆதிமூலம், ரா. ம. பெருமாள் பிள்ளை, ச. சச்சிதானந்தம், க. ராஜகோபால், வி. எஸ். சுப்பய்யா செட்டியார், பி. ஓ. அஹமது லெப்பை, எஸ். எம். செய்யதலி, பொ. கருப்பையா, முத்தலிப் பிரதர்ஸ், ஹபீப் ஸ்டோர்ஸ், எக்ஸெல்சியர் ஸ்டோர்ஸ், கே. ஓ. நாகூர் மீராசாஹிப், சில்வா பிரஸ், அருணா புக் டிப்போ, அரு. வடு. வடுகநாதன் செட்டியார், எஸ். எம். அலி அண்டு கம்பெனி, எம். ஏ. ஏ. சத்தார் அண்டு கம்பெனி, கே. ஏ. சிதம்பரம் பிள்ளை அண்டு சன்ஸ், குளூன் ஸ்டோர்ஸ், கண்டி ஸ்டோர்ஸ், வல்லிபாய் அசனலி, சைனீஸ் பூவியன் ஸ்டோர்ஸ், பாய்வா டீ ரூம், எஸ். சித்தப்ப செட்டியார், டப்ளியூ. ஆர். சுப்பையா பிள்ளை, பெரி. முத்து. மு. கே. எம். அகமது முகைதீன், மு. ராமனாதன், எஸ். டி. எம். சுபாசி, கே. நரசிம்மன் ராஜு. டி. சுந்தர ராஜு பூபாலராயன், பி. ஏ. ஜெயசிங், கே. எம். முத்து வடிவு அண்டு பிரதர்ஸ், முகம்மது அலிபா, வள்ளியப்ப செட்டியார் பேராதெனியா.

ரூ. 1—8—0 ஸ்ரீமான்கள் ஜெ. ரத்தினமணி சாமுவேல், பெரி. ஏகாம்பரம் பிள்ளை.

ரூ. 1—0—0 : ஸ்ரீமான்கள் அ. தம்பிக்கை பெர்ணாந்து, வேம்பாறு; கே. ஆசைதேவின் தல்மேய்தா, வேம்பாறு; டி. இருதயசாமி பெர்ணாந்து, வேம்பாறு; அ. தேவதாஸ் பெர்ணாந்து, வேம்பாறு; பத்திநாசர் தல்மேய்தா, வேம்பாறு; சொ. சொக்கையா பிள்ளை, தெ. நாகலிங்கம், அ. பாண்டியன், சொ. சண்முகம், ந. அருணாசலம், என். பொன்னுசாமி, ஆர். கே. சின்னசாமி, பி. ரெங்கசாமி, த. குழந்தைவேலு, சா. முத்தரசு, ஜெ. கோட்டய பிள்ளை, அ. அருணாசலம், சு.ப. அருணாசலம் பிள்ளை, அரு. சொக்கையா, மு. சுந்திர பாண்டியன், ராகப்ப சேர்வை, கோவிந்தசாமி, வெங்கடாசலம் பிள்ளை, மு. ஆறுமுகம், ச. பூவலிங்கம் பிள்ளை, ஏ. அப்துல் காதர் சாயபு, எம். டாவுட் சாயபு, எஸ். ராமசாமி பிள்ளை, பி.ஏ. பண்டார, எஸ். சுப்பையா பிள்ளை, ஏ. வீரபத்திர ஆச்சாரி, எஸ்.ஏ.எஸ். ஹமீது, எம். எ. அப்பாஸ், எஸ். கே. சதக் இப்ராஹீம், எஸ். கே. மூசா தமீறு, எஸ்.ஜ.எம். முகைதீன், எம். கணபதி, எஸ். ஆர். சின்னையா பிள்ளை, ஜெ. ராமசாமி, சி. ரஜமசாமி செட்டியார், அ. வீருச்சாமி நாயுடு, என். ஆர். எம். பழனியப்ப செட்டியார், ஏ.எஸ். ராமநாதன், எஸ்.வி. சுப்ரமணியம் செட்டியார், ஜோசப் துரைசாமி கோமஸ், ஸ. அ. பக்கீர் முகம்மது, எஸ். கே. காசிம் பிள்ளை சன்ஸ், எஸ். எம். வஸ். ஜுட்ருன், எம். வி. பலவேந்திரம், என். பழனியாண்டி, இ. பதுர்மன், ஏ. கே. காமல்பாச்சா, எம். காதர் முகைதீன் சாயபு. ஏ. எம். சவுக்கத்தலி, எஸ். கே. முருகேசு. எ. எம். கந்த பிச்சை, மூசா நைநு அண்டு சன்ஸ், பி. மாணிக்கம், மு. அ. மு. முகம்மது இப்ராஹிம், எம். ஜான், பி. குட்டி அசன், எம். எச். எஸ். ஹமீது. பி. சாமிநாதன், எம். ஜெயநுலாப்தீன், குசெய்ன் ஸ்டோர்ஸ், ஆர். எம். சிவனடியா பிள்ளை, ஜின்னு ஸ்டோர்ஸ், எ. டி. அமரசிவாலா, வெ. ஆரு. பெரி. மு. சி. சு. ப. சின்னக்குமாரு செட்டியார், ஆர். கோமதி, என். ராமசாமி, எம். குருசாமி, எஸ். பி. ராமச்சந்திரா, பெ. சிதம்பரம் பிள்ளை, என். பெரியண்ண பிள்ளை, ச. சிவராமன், சி. அ. அய்யாத்துரை பத்தர், எ.எஸ். எம். சரீப்மன், எம்.எ. மாணிக்கம், எ. இப்ராம்ஜி, ஜெ. டயுன்டி. எ. வெண்டர்வெட், கே. எம். அப்துல் காதர் சாயபு, வி. கிட்ணு. கே. பி.

ரூ. 1 0 0 : (பேராதெனியா) ஸ்ரீமான்கள் பி. கந்தசாமி பிள்ளை, எஸ். எம். அப்துல் காதர், கே. சிவபெருமான், க. ச. அருணாசலம், சி. பி. சின்னையா, எஸ். இ. அகம்மது மீரா சாயபு, வி. வீரசிங்க, எஸ். நடாராஜா, டி.ஜெ.பி. மன்னுன், டெல்தோட்டா; வி. எம். எஸ். கம்பெனி. ஆக ரூ. 545—0—0

அந்தப் பெண்ணினுடைய தகப்பனார் பத்மாவின் தகப்பனாருக்கு மிகவும் வேண்டியவராம். பால்யத்தில் இருவரும் ஒரே வகுப்பில் படித்தவர்களாம். பத்மாவின் தகப்பனார் அவருடைய தலையைக்கண்டு விட்டு, "அடேடே!" என்று சொல்லிக் கொண்டே ஓடினார். போய் விசாரித்ததில் அந்தப் பெண் அவருடைய மூத்த பெண் என்றும், அவளுடைய புருஷன் 'ரேஸ் கோர்ஸி'ல் 150 ரூபாய் சம்பளத்தில் வேலையிலிருப்பதாகவும், இத்தனை நாள் அவளுடைய தகப்பனாரும் தாயாரும் பூனாவில் இருந்த இரண்டாவது பெண் வீட்டிற்குப் போயிருந்ததாகவும், அந்தப் பூனா பெண்ணினுடைய பிரசவத்துக்கு ஒத்தாசையாயிருந்து விட்டு, பிரசவம் முடிந்து இப்போதுதான் மூத்த பெண்ணிடம் வந்ததாகவும் கூறினார்களாம். இந்தச் சங்கதிகள் அவ்வளவையும் பத்மாவின் தகப்பனார் தம் வீட்டுக்கு வந்து சாங்கோபாங்கமாய்க் கூறி முடித்தார்.



"என்ன ஸார், வீடு கட்டி முடிவதற்குள்ளாகவே குடித்தனம் செய்ய ஆரம்பித்து விட்டீர்களே!"

"என்ன செய்யறது? கட்டி முடிந்ததும் இந்த வீடு எனக்குத்தான் வாடகைக்கு கிடைக்கிறது என்று என்ன நிச்சயம்?"

"அப்படியா!" என்று எல்லோரும் மூக்கில் விரல் வைத்து ஆச்சரியப்பட்டனர்.

"ஐயோ பாவம், வீணாகப் பழி வைத்துக் கேலி செய்து கொண்டிருந்தோமே" என்றான் ஒருவன். "அப்படியானால் இந்த வதந்தி எப்படி வந்தது?" என்று கேட்டான் இன்னொருவன்.

"அம்மாதிரி வேறு யாராவது ஒரு பெண் இருந்திருக்கலாம். அந்தக் கதையை இவன் மீது யாராவது சுமத்தியிருக்கலாம்" என்றார் தகப்பனார்.

"பின் ஏன் அவன் ஒருவரிடமும் பேசாமல் வீட்டுக்குள்ளேயே புகுந்து கொண்டிருந்தான்? ஏன் வேலைக்காரிகூட வைத்துக் கொள்ளவில்லை?" என்று ஒரு கேள்வி எழுந்தது.

"அதுவா? அவளுடைய புருஷனுக்கு 'ரேஸ் கோர்ஸி'ல் வேலையானதால் சென்னைக்கு ரேஸ் வந்ததும் அவனையும் இங்கு மாற்றியிருந்தார்களாம். சென்னையில் வீடு கிடைப்பது துர்லபமாயிருந்ததால் எப்படியும் இந்த வீட்டை அமர்த்திக் கொள்ளலாமென்று இருந்தானும். ஆனால் இந்த வீட்டில் 'பேய் பிசாசு' என்று ஒரு வதந்தி பரவியிருந்ததால் அதைத் தன் மனைவியிடம் சொன்னால் எங்கே பயப்படுவாளோ என்று நினைத்தே அவனை யாரிடமும் பேசக் கூடாது என்று உத்தரவு போட்டிருந்தானும். அவள் யாரிடமாவது பேசினால் யாராவது வீட்டைப் பற்றி அவளிடம் பிரஸ்தாபிக்க நேரிடலாம். கர்ப்பிணியான அவள் யார் பேச்சையாவது கேட்டுக்கொண்டு அந்தவீட்டில் குடியிருக்கப் பயப்படலாம். வீடு கிடைப்பது அரிதாயிருக்கும் இந்நாளில் இந்த வீட்டை விட்டுவிட்டு வேறு எங்கு அவஸ்தைப் படுவது என்று எண்ணியே அப்படிக் கட்டுத் திட்டம் செய்து வேலைக்காரிகூட இல்லாமல் வைத்திருந்தானும். அவனுக்கு இந்தப் பேய் பிசாசுகளில் கொஞ்சமும் நம்பிக்கை கிடையாதாம். அதனாலேயேதான் இந்த வீட்டை வாடகைக்கு எடுத்துக் கொண்டானும். இதற்காகவே வேலைக்காரி செய்ய வேண்டிய வேலைகளையெல்லாம் தானே செய்து கொண்டிருந்தானும்" என்று கூறி முடித்தார்.

இதைக் கேட்டுப் பத்மாவின் தாயார், சகோதரிகள் எல்லாம் தங்களுடைய செய்கைக்கு மிகவும் வருத்தப்பட்டனர். வீணான வதந்தியை நம்பி அந்தக் களங்கமற்ற தம்பதிகளின் வாழ்க்கைக்கு மாசு கற்பித்த பெருங் குற்றத்தை நினைந்து உள்ளூர மனம் புழுங்கினர். அடுத்த வாரமே அந்தத் தம்பதிகள் 'ரேஸ் கோர்ஸ்' முடிந்து வேறு ஊருக்குக் கிளம்பிச் சென்று விட்டனர். அந்த வீட்டைப் பற்றிப் பரவியிருந்த வீண் வதந்தியும் அத்தோடு மறைந்து, வேறு யாரோ புதுக் குடியும் வந்து விட்டனர்.

வந்து முகத்தைக் கவ்விக் கொண்டது. அந்த மாமியிடம் என்ன பேசுவதென்று தெரியவில்லை. திரும்பி ஓட்டமாய் ஓடியே வந்து விட்டாள். அப்புறம் இரண்டு மூன்று தடவை அடுத்தடுத்துப் போனாள். அவளும் கொஞ்சம் கொஞ்ச மாகப் பேசிப் பார்த்தாள். திரும்பி வரும் போது குழந்தையிடம் ஏதாவது கொடுத் தனுப்புவாள். அதை யெல்லாம் பத்மா வழியிலேயே போட்டுவிட்டு வந்து விடு வாள். வீட்டுக்கு எடுத்து வந்தால் அம்மா கோபிப்பாள் என்ற பயம்தான்.

பத்மாவுக்கு ஒருநாள் அந்த 'மாமி' யைப் பார்த்து ஒரு கேள்வி கேட்க வேண்டும் போலிருந்தது. கேட்டு விட் டாள்: "உங்க அப்பா, அம்மா எங்கே? வரமாட்டாளா?" என்று கேட்டாள்.

"வருவாளே!"

"எப்ப வருவா?"

"இன்றைக்குக் கூட வரலாம்" என்று கூறினாள் அந்த மாமி. யாரிட மும் அதிகம் பேசாத அவளுக்குப் பத்மா விடம் பேசுவதில் அலாதி இன்பம் இருந்தது.

அந்த வீடு ரயில்வே லயனுக்குச் சமீபம் இருந்ததால் ஒவ்வொரு நாளும் போட் மெயில் வரும்போது அதை உற்றுக் கவனித்துக் கொண்டிருந்தாள். "ரயிலில் யாரைப் பார்க்கிறீர்கள் மாமி?" என்று பத்மா கேட்டதற்கு, "என் அப்பா அம்மா வருவாளா என்று தான் பார்க்கிறேன்" என்று பதில் கூறினாள்.

அம்மாவுக்குத் தெரியாமல் பத்மா எதிர் வீட்டுக்குப் போய் வருவதை அவளுடைய சகோதரிகள் தெரிந்து வைத்துக் கொண்டிருந்தனர். பத்மா வின் மூலம் எதிர் வீட்டு விஷயங்களைக் கிரகிப்பதற்கு அது ஒத்தாசையா யிருந்த தால் அவர்களும் இதை அம்மாவிடம் சொல்லவில்லை. ஆறு மாத காலமாகி யும், அந்த எதிர் வீட்டுப் பெண்ணைத் தாயாரோ தகப்பனாரோ யாருமே வந்து பார்க்கவில்லை. இதனால் அவள் பேரிலிருந்த அவப் பெயர் இன்னும் ஊர்ஜிதமாகி, இந்த வதந்தி காற்று வாக்காய்ப் பரவ ஆரம்பித்தது.

★

அன்று வெள்ளிக்கிழமை. பத்மா அவர்கள் வீட்டுக்குப் போயிருந்த சம யம் கர்ப்பிணியா யிருந்த மாமிக்கு 'வலி' கண்டிருந்தது. துணைக்கு ஆளில் லாமல் தவித்துக் கொண்டிருந்தாள். அவளுடைய புருஷனும் சீட்டாடக் கிளப்புக்குப் போயிருந்தான். பத்மா ஒன்றும் புரியாமல் சிறிது நேரம் தவித்து விட்டு, பிறகு தெருக் கோடியி லிருந்த கிளப்புக்கு ஓட்டமும் நடையு மாய்ப் போய் அவனிடம் விஷயத் தைக் கூறினாள். சீட்டை அப்படியே போட்டுவிட்டு எழுந்து வந்த அவன் கையோடு ஒரு நர்ஸைக் கூட்டிக் கொண்டு வந்தான். சாயங் திரம் மாமிக்குப் 'பேபி' பிறந்த விஷயம் பத்மாவின் வீட்டுக்கு உடனே எட்டிய தில் ஆச்சரியமில்லை. ஆனால் மறு நாள் யாருமே எதிர் பாராத விதமாய் மற்றொரு சம்பவம் நடந்தது. எதிர் வீட்டுக்கு அந்தப் பெண்ணி னுடைய தாயார், தகப்பனார் வந்திருந்தார்கள். இதைக் கண்ட பத்மாவின் தாயா ருக்கும் சகோதரிகளுக்கும் பிரமிப்பா யிருந்தது. "ஏதோ மாதிரி சொல்லிக் கொண்டார்களே? பின் எப்படி இவர்கள் வந் தார்கள்?" என்று யோசித் தனர். அன்று சாயந்திரமே இவர்களுடைய சந்தேகங் களுக்கும் எதிர் வீட்டுப் பெண்ணைப் பற்றின வீண் வதந்திக்கும் ஒரு முற்றுப் புள்ளி ஏற்பட்டது.



குத்துச்சண்டை பயில்வான் (மற்றொரு பயில்வானிடம்):— அட, இருடா! இவங்க சண்டையிலே நம்ம சண் டையை யார் கவனிப்பாங்க?

அதற்கப்புறம் இவனுடைய அப்பா அம்மாவும் இவனுக்கு ஒரு முழுக்குப் போட்டு விட்டு இனி இவன் முகத்தில் விழிப்பதில்லை என்று தள்ளி வைத்துவிட்டார்கள். அதனால்தான் இவள் அவனுடன் புறப்பட்டு கண்ணுக்கு மறைவாய் வந்து காலம் கழிக்கிறாள். அவனுக்கு ரேஸ் பைத்தியம், குடி எல்லாம் உண்டு.



இந்தச் செய்தியை பத்மாவின் தாயாருக்கு அடுத்த தெருவிலிருக்கும் அவளுடைய சிநேகிதை சொன்னாளாம். இதைப் பத்மாவின் தாயார் தன் பெண்களிடம் வந்து கதை கதையாகச் சொன்னாள்.

"ஓகோ! அதனால்தான் அவள் அப்படி வீட்டுக் குள்ளேயே உட்கார்ந்து கொண்டு அஞ்ஞாத வாசம் செய்கிறாளா? என்னடிம்மா என்று பார்த்தேன்'' என்றாள் ஒருவள்.

"சரிதான்; இருக்கும், இருக்கும். அவன் ரேஸுக்குத்தான் போகிறான். ரேஸ் இருக்கும் நாளிலெல்லாம் அவன் ஒழுங்காக டிரஸ் செய்து கொண்டு வெளியே கிளம்பும் போதே எனக்குச் சந்தேகம்தான்'' என்றாள் இன்னொருவள்.

"அப்படியானால் மற்ற நாட்களிலெல்லாம் அவன் எங்கே போகிறான்?'' என்று கேட்டாள் ஒருத்தி.

"அதுவா? குடிக்கப் போவான். இல்லா விட்டால் எங்கேயாவது போய் கிளப்பில் சீட்டாடிக் கொண்டிருப்பான். யார் கண்டார்கள்?'' என்று மற்றொருவள் பதில் கூறினாள்.

"ஆமாம்; உங்க அப்பாகூட அவனை ஒருநாள் கிளப்பில் கண்டாராம். சற்று நேரம் அவனும் இவரும் உற்று உற்றுப் பார்த்துக் கொண்டார்களாம். ஆனால் ஒன்றும் பேச வில்லையாம்'' என்றாள் தாயார்.

"நீ சொன்ன கதை நிஜமாய்த்தான் இருக்கும் அம்மா! அவள் அவனை இழுத்துக் கொண்டு வந்தவள் தான்'' என்று மூன்று சகோதரிகளும் ஏக மனதான முடிவுக்கு வந்து தங்கள் சந்தேகத்துக்கு ஒரு முத்தாய்ப்பு வைத்தார்கள்.

★

**ப**த்து வயதுகூட நிரம்பாத பத்மாவுக்குத் தன்னுடைய தாயார், தமக்கைகள் பேசிக் கொண்ட விஷயம் இன்னதென்றே விளங்கவில்லை. அவள் உலகம் அறியாதவள்தானே? ஆனால் இவர்களெல்லாம் எதிர் வீட்டு மாமியைப் பற்றி ஏதோ ஏளனமாகப் பேசிக் கொண்டிருக்கிறார்கள் என்று மட்டும் தெரிந்து கொண்டாள்.

எப்படியாவது அவளுக்கு எதிர் வீட்டுக்குப் போய் அந்த மாமியுடன் பேசிவிட்டு வரவேண்டும் போலிருந்தது. ஒருநாள் யாருக்கும் தெரியாமல் அந்த வீட்டுக்குப் போனாள். கதவினருகில் போய் நின்றுகொண்டு கதவைத் தட்டலாமா என்று யோசித்தாள். மார்பு படபட வென்று அடித்துக் கொண்டது. இரண்டு தடவை மெதுவாகத் தட்டினாள். உள்ளே யிருந்து அவன் வந்தான். வந்தவன் முத்துப் போன்ற தன் பற்களைக் காட்டிச் சிரித்துவிட்டு குழந்தை பத்மாவின் கன்னத்தைக் கிள்ளி, "உள்ளே வா'' என்று அன்போடு அழைத்தான். பத்மாவுக்கு லஜ்ஜை



கார் சொந்தக்காரர் (டிரைவரிடம்) :—இந்தக் கார்களில் எது நம்முடையது? என் பொடி டப்பியை அதில் வைத்திருக்கிறேன்.

ஒரு வேலைக்காரியைக் கூட அமர்த்திக் கொள்ளாததேன்? எல்லா வேலைகளையும் அவனே அல்லவா செய்து கொண்டிருக்கிறான்? சில சமயம் அவன் மேல் மாடியில் தானே புடவைகளைக் கொண்டுபோய் உலர்த்துவான். அக்கம் பக்கத்திலிருந்து யாராவது கவனிப்பார்களே என்ற கவலையில்லாமல் துடைப்பத்தை வைத்துக் கொண்டு வாசல் வராந்தாவைப் பெருக்குவான். விறகுக் கட்டைகளை ஏதோ புஷ்பங்களை வாரிச் செல்வது போல் நினைத்துக் கொண்டு சங்கோசமின்றி எடுத்துப் போவான்.

சகோதரிகளுடைய ஆச்சரியத்துக்கு இதெல்லாம் மேலும் மேலும் உரம் போட்டது போல் இருந்தது. அந்த யுவதி வாசல் பக்கம் வருவாளா, அல்லது ஜன்னல் பக்கமாவது வந்து எட்டிப் பார்ப்பாளா என்று சதா கவனித்துக் கொண்டே இருப்பதில் அவர்கள் பொழுதை வீணாக்கினார்கள். ஊரிலிருந்து வந்தபோது காரிலிருந்து இறங்கி வீட்டுக்குள் சென்றவளை அப்புறம் கண்ணால் காண்பதே அரிதாகி விட்டது. இதில் ஏதேனும் இரகசியம் இருக்குமோ? எல்லாம் ஒரே மூடு மந்திரமாகவே இருக்கிறதே என்று சகோதரிகளும் அவர்களுடைய தாயாரும் வியந்தனர். தங்கள் வீட்டுக்குப் பால் கொடுக்கும் அதே பால்காரிதான் அவர்கள் வீட்டுக்கும் கொடுத்துக் கொண்டிருந்தான். பால்காரி மூலம் விவரம் அறிய முயற்சி தொடங்கினர். பால்காரிக்கும் ஏற்கெனவே அவர்களைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டுமென்ற ஆசையிருந்ததால் கொஞ்சம் கொஞ்சமாக அந்த யுவதியின் வாயிலிருந்து வார்த்தைகளை வரவழைக்கப் பிரயத்தனப்பட்டான்.

ஒரு நாள் பால்காரி சகோதரிகளிடம் வந்து தினமும் அந்த அம்மாள் காலையில் அரைப்படி எருமைப் பாலும் சாயந்திரம் அரைப்படி பசும்பாலும் வாங்குவதாகக் கூறினான். இந்த விவரத்துக்கு மேல் அவனால் ஒன்றும் கூற முடியவில்லை. இதிலிருந்து சகோதரிகள் என்னத்தை ஊகித்தறிவது?

"எந்த ஊர் என்று கேட்டாயா?" என்று பத்மாவின் தாயார் கேட்டான்.

"திருச்சினாப்பள்ளியாம்" என்று பால்காரி கூறினான்.

"அவளுடைய அப்பாவுக்கு என்ன வேலையாம்?"

"அது எனக்குத் தெரியாதம்மா; கேட்டால் ஒன்றும் பதிலே பேசுவதில்லை. பேச்சு ரொம்பக் கணக்காயிருக்குது" என்றான் பால்காரி.

வர வர எதிர் வீட்டுத் தம்பதிகளின் மீது பத்மாவின் தாயாருக்குச் சந்தேகம் வலுக்க ஆரம்பித்தது. அதற்குத் தகுந்தாற்போல் இவளுடைய காதில் பராபரியாய் ஒரு சேதி விழுந்தது. அந்தச் சேதி இதுதான்:—

"திருச்சினாப் பள்ளியில் ரங்கசாமி ஐயங்கார் என்றொரு ரிடையர்டு வக்கீல் இருக்கிறார். அவருக்கு இரண்டு பெண்கள். இரண்டு பெண்களும் காலேஜில் படித்தவர்கள். அந்தப் பெண்களில் ஒருவன்தான் இப்போது எதிர் வீட்டுக்குக் குடி வந்திருக்கிறான். இவன் காலேஜில் வாசித்துக் கொண்டிருக்கும் போதே ஒருவனைக் காதலித்துக் கொண்டிருந்தான். அவனையேதான் கல்யாணம் செய்து கொள்வேன் என்று பெற்றோர்களிடம்பிடிவாதம் பிடித்தான். குலம் கோத்திரம் சரியில்லாததால் அதற்கு இவளுடைய பெற்றோர்கள் சம்மதிக்கவில்லை. கடைசியில் இவன் அவளை இழுத்துக் கொண்டு ஓடி வந்து விட்டான்.



ஜாபிதா போட்டு வைத்துக் கொண்டான். பழக் கூடையில் என்ன இருக்கலாம் என்று பத்மா யோசித்தான். ஒன்றரை வருஷ காலமாய்ப் பூட்டிக் கிடந்த அந்த வீட்டைப் பற்றின மர்மமே சரியாய் விளங்காமலிருக்கும் போது, அதற்கு இந்தப் புதுத் தம்பதிகள் குடி வந்திருக்கிற விஷயம் இன்னும் ஆச்சரியத்தை உண்டு பண்ணிற்று.

பத்மாவுக்கு ஒன்றுமே புரியவில்லை. இத்தனை நாளாக அவன் தினமும் பள்ளிக்கூடத்திலிருந்து வந்ததும் வராததுமாய், அம்மா கொடுக்கும் காப்பியை அருந்திவிட்டு எதிர் வீட்டுத் தோட்டத்தில் போய் ஆனந்தமாகப் பொழுதைப் போக்கி வந்தான். அந்தத் தோட்டத்தில் அடர்ந்து படர்ந்திருந்த பசும் புற்களின் மீது படுத்துக் கொண்டே வானத்தில் நட்சத்திரங்கள் தோன்றும் வரை விளையாடிவிட்டு வீட்டுக்குத் திரும்பி வருவான். ஒரு நாள் அவனுடைய தாயார், "அடி பத்மா, இனி நீ எதிர் வீட்டுத் தோட்டத்துக்கு விளையாடப் போனால் விளக்கு வைப்பதற்குள் திரும்பி வந்து விட வேண்டும். தெரியுமா? அந்த வீட்டில் பிசாசு இருக்கிறதாம்'' என்று பயமுறுத்தி வைத்திருந்தாள். அது முதல் பத்மா பிசாசுக்குப் பயந்து கொண்டு மஞ்சள் வெயில் மறையுமுன்பே வீட்டுக்குத் திரும்பி வந்து விடுவான்.

இப்படி இருக்கும்போது திடீரென்று அந்தப் 'பிசாசு இருக்கிற' வீட்டுக்கு யாரோ இரண்டு பேர்கள் குடிவந்த விஷயம் அவன் களங்கமற்ற இளம் மனதை என்னமோ செய்து கொண்டிருந்தது.

★

மணி ஒன்பது அடித்து வெகுநேரம் வரை பத்மாவின் சகோதரிகளுக்கு இருப்புக் கொள்ளவே யில்லை. ஜன்னலை விட்டு நகராமல் எதிர் வீட்டு விவகாரங்களையே சினிமா பார்ப்பது போல் இமை கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தார்கள். வெகு நாளாய் அந்தகாரத்தில் கிடந்த அந்த வீட்டில் இன்று எலெக்ட்ரிக் வெளிச்சம் பட்டப் பகல் போல் தெரிந்தது. வாசல் ஜன்னல்கள் இரண்டுக்கும் திரை போட்டு மூடியிருந்ததால் தம்பதிகளின் நடவடிக்கைகளைச் சரியாகக் கவனிக்க முடியவில்லை. இருந்தாலும், திரைக்குப் பின்னால் அவ்விருவருடைய நிழலும் அடிக்கடி தென்பட்டன. அதற்கு மேல் சகோதரிகளால் ஒன்றும் கவனிக்க முடியவில்லை.



மறுநாள் சகோதரிகள் சரியாகப் பொழுது புலர்வதற்குள்ளாகவே எழுந்திருந்து எதிர் வீட்டைக் கவனிக்க ஆரம்பித்து விட்டனர். பத்மாவுக்கு வந்திருப்பவர்களைப் போய்ப் பார்க்க வேண்டும் என்று ஆவலாய் இருந்தது. ஆனால் அம்மா அந்த வீட்டுப் பக்கம் இனி காலடி எடுத்து வைக்கக் கூடாது என்று கண்டிப்பான உத்தரவு போட்டிருந்தாள். "அம்மாவுக்குத் தெரியாமல் எப்படிப் போவது? போனால் அம்மா . கோபித்துக் கொள்வாளே" என்று பயந்தான். காலை மணி ஏழரை இருக்கலாம். மேல் மொட்டை மாடியில் இருந்த கம்பிக் கொடியில் முதல் நாள் காரில் வந்த யுவதி கட்டிக்கொண்டிருந்த மேகவர்ணப் புடவையைக் காயப் போட்டிருந்ததைச் சகோதரிகள் கவனித்தனர். ஆனால் அந்த யுவதியை மட்டும் கண்ணில் காணவே யில்லை.

★

புதுத் தம்பதிகள் குடி வந்து ஒரு வாரம் ஆகியும் அவர்களுடைய விவரம் ஒன்றும் சகோதரிகளுக்கும் அவள் தாயாருக்கும் புரியவே யில்லை. பார்ப்பதற்கு நாகரிகத் தோற்றம் கொண்ட அவர்கள் கொஞ்சம் பணமுள்ளவர்கள் என்றும் தோன்றியது. அந்த யுவதி பட்டுப் புடவையைத் தவிர்த்துவேறு புடவை கட்டுவதில்லை என்பது தினமும் ஒரு பட்டுப் புடவையாக மொட்டை மாடிக் கொடியில் உலர்ந்து கொண்டிருப்பதிலிருந்து தெரிந்தது. ஆனால் அந்தஸ்தான வாழ்க்கை நடத்தும் அந்தத் தம்பதிகள் வீட்டு வேலை செய்ய



# விஷம வதந்தி

சாவி

இந்த யுத்த காலத்தில் எத்தனையோ ஆச்சரிய சம்பவங்கள் நடைபெறுகின்றன. அப்படிப் பட்ட ஆச்சரியங்களில் சென்னைப் பட்டணத்தில் எழும்பூர் 'ஸ்பர் டாங்க்' ரோடிலிருந்த ஒரு வீடு ஒன்றரை வருஷ காலமாகப் பூட்டிக் கிடந்ததும் ஒன்றாகும். குடியிருக்க வீடு கிடைக்குமா என்று எத்தனையோ பேர் திண்டாடித் தெருவில் நிற்கும் இந்த நாளில் மேற்படி வீட்டுக்கு யாருமே குடி வராமலிருந்தது பெரிய ஆச்சரியமே யல்லவா? அதற்குக் காரணமும் ஒரு மர்மமாகவே இருந்தது. எவ்வளவோ பேர்கள் வீட்டைப் பார்க்க வருவதும், கட்டடத்தின் அமைப்பையும், அதைச் சுற்றி யிருந்த தோட்டத்தின் அழகையும் கண்டு மயங்கிப் போவதும், கடைசியில் ஏதோ ஒரு விஷயத்தைக் கேட்டுவிட்டு, "நமக்கு வேண்டாம், இந்த வீடு!" என்று சொல்லிக் கொண்டு போவதும் வழக்கமா யிருந்தது.

வீடு பார்ப்பதற்கு மிகவும் கவர்ச்சிகரமாய் இருந்தது. சிமெண்டுக் கட்டிடம். கட்டடத்தைச் சுற்றிப் பெரிய காம்பவுண்டு; காம்பவுண்டுக் குள்ளிருந்த வேப்ப மரங்களும், புஷ்பச் செடிகளும் நந்தவனம் போல் காட்சி யளித்தன.

இந்த வீட்டுக்கு எதிரில் கூப்பிடு தூரத்தில் இன்னொரு வீடு இருந்தது. அதில் குடி யிருந்தவர்களுக்குக் கூட மேற்படி வீட்டைப் பற்றின மர்மம் வெகு நாள் வரை இன்ன தென்று விளங்கவில்லை. அந்தக் குடும்பத்தில் வயது வந்த பெண்கள் மூவரும், ஒரு சிறு பெண்ணும், அவர்களுடைய தாய், தகப்பனும் இருந்தார்கள்.

ஒரு நாள் சாயந்திரம் திடுதிப்பென்று எதிர் வீட்டு வாசலில் ஒரு 'டாக்ஸி' வந்து நின்றது. எதிர் வீட்டில் கார் வந்து நிற்பதைக் கண்ட அந்தச் சிறு பெண் பத்மா, ஆச்சரியம் தாங்காமல் தன் வீட்டுக்குள் ஓடிப் போய், "அம்மா, அக்கா, எதிர் வீட்டுக்கு யாரோ வந்திருக்கா" என்று கண்களை அகல விரித்துக் கூறினாள்.

"எதிர் வீட்டுக்கா!" என்று கேட்டுக் கொண்டே பத்மாவின் தாயாரும் சகோதரிகளும் சமையல் கட்டிலிருந்து ரேழி அறை ஜன்னல் பக்கம் வந்து நின்று கூர்ந்து கவனித்தார்கள்.

'டாக்ஸி'யிலிருந்து இரண்டு பேர் இறங்கினார்கள். ஒரு ஸ்திரீயும் புருஷனும்தான். அப்புறம் ஒரு பெட்டி, ஒரு படுக்கை, ரயில் கூஜா, ஒரு பழக்கூடை இன்னும் சில வெள்ளிப் பாத்திரங்கள் எல்லாம் கீழே எடுத்து வைக்கப்பட்டன. டாக்ஸியிலிருந்து இறங்கியவன் நாகரிகமா யிருந்தான். பர்ஸைத் திறந்து ஐந்து ரூபாய் நோட்டு ஒன்றை எடுத்து டிரைவரிடம் கொடுத்தான். இதற்குள் அவனுடன் வந்திருந்த யுவதி வீட்டுக் கதவைத் திறந்து உள்ளே பிரவேசித்தாள்.

ஜன்னலருகில் நின்றபடியே இதையெல்லாம் கவனித்துக் கொண்டிருந்த சகோதரிகள், வந்தவள் கட்டிக் கொண்டிருந்த மேக வர்ணப் புடவை, கையில் எத்தனை வளை, தலை வகிடு கோணலா, காலில் அணிந்திருந்தது ஸ்லிப்பரா, பூட்ஸா முதலிய அத்தனை நுணுக்கமான விஷயங்களையும் அதற்குள் பார்த்து வைத்துக் கொண்டார்கள். டாக்ஸியிலிருந்து இறங்கிய சாமான்கள் என்னென்ன என்பதை ஒரு சகோதரி

உபாத்தியாயர் நரி, "வாருங்கள், வாருங்கள்" என்று புலியாரை உபசரித்தார். இன்ஸ்பெக்டரைப் பார்த்த மிருகப் பையன்கள் யாவும் தம் தம் இடங்களில் நின்றன. இன்ஸ்பெக்டர் கண்ணுக்குச் சரியாகத் தெரியாததினால் குள்ள வாத்து ஓட்டைச் சிவிங்கியின் தலையின்மேல் நின்று பார்த்தது. உபாத்தியாயர் நரி விறைத்துப் பார்க்கவே, குள்ள வாத்து தொப்பென்று கீழே குதித்து விட்டது. வந்த இன்ஸ்பெக்டர் புலியார் நாற்காலியில் அமரப்போக, உபாத்தியாயர் நரியார் "அடாடா! அந்த நாற்காலியில் உட்காராதீர்கள்; உங்களுக்காக வைத்திருக்கும் இந்த மெத்தை தைத்த நாற்காலியில் உட்காருங்கள்" என்று தனக்குப் பின்னுலிருந்த நாற்காலியைச் சுட்டிக் காட்டி இன்ஸ்பெக்டர் புலியாரை உட்காரச் செய்தது.

இன்ஸ்பெக்டர் புலியார் நாற்காலியில் உட்கார்ந்ததுதான் தாமதம். உடனே "வீர், வீர்!" என்று கத்திக் கொண்டே நாற்காலியிலிருந்து நாலு அடி உயரம் துள்ளிக் குதித்து எழுந்தார். உடனே நரியாரைப் பார்த்து மிகக் கோபத்துடன், "வேணுமென்று என்னை அவமானப் படுத்த நீர் செய்த வேலையா இது? அந்த நாற்காலியில் நான் உட்கார இருக்க, என்னை இந்த நாற்காலியில் உட்காரச் சொன்னது இதற்குத்தானா?" என்று கோபத்துடன் குதித்தது. உபாத்தியாயர் நரியாரும் மிருகப் பையன்களும் விஷயம் என்னவென்று புரியாமல் தவித்தன. பிறகு புலியார் உட்கார்ந்த நாற்காலியை உற்று நோக்க, கறுப்பு மெத்தையின் மேல் உருண்டையாகத் தன் தேகத்தை சுருட்டிக் கொண்டு முள்ளம் பன்றி படுத்துக் கொண்டிருந்தது.

உடனே நரியார், தெரியாமல் நடந்த இந்தச் சம்பவத்துக்குத் தன்னை மன்னிக்கும்படி புலியாரைக் கேட்டுக் கொண்டு, முள்ளம் பன்றியைக் கூப்பிட்டு விசாரித்தது. நடந்த சமாசாரங்களை அறிந்த முள்ளம் பன்றி வருத்தமடைந்து இன்ஸ்பெக்டர் புலியாரைப் பார்த்து, "ஐயா! நான் உபாத்தியாயர் நரி சொல்லியிருந்தபடி தங்கள் வருகையை முன்னிட்டு அதிகாலையில் இருட்டு நீங்கும் முன்பே பள்ளிக்கூடத்துக்கு வந்து விட்டேன். அப்பொழுது தூக்கக் கலக்கத்தில் வகுப்பில் ஒருவருமில்லாததால் மெத்தை



தைத்த நாற்காலியில் சற்று அமர்ந்து தூங்கி விட்டேன். என்னுடைய நிறமும் மெத்தையின் நிறமும் கறுப்பாக இருந்ததினால், தாங்கள் தவறி நான் இருப்பதைக் கவனிக்காமல் மெத்தை என்று நினைத்து உட்கார்ந்து விட்டீர்கள்" என்று சொல்ல, சற்று வலி அடங்கிய இன்ஸ்பெக்டர் புலியார் அச்சம்பவத்தை நினைத்துச் சிரித்தார்.



# நரி உபாத்தியாயர்

ராஜி

உபாத்தியாயர் நரி, மிருகப் பையன்களைப் பார்த்து, "பையன்களே! நாளைய தினம் இன்ஸ்பெக்டர் புலியார் வருவதால் நீங்கள் எல்லோரும் நல்ல உடைகளை அணிந்து கொண்டு காலை பத்து மணிக்கே பள்ளிக்கூடத்துக்குத் தவறாமல் வந்து சேரவேண்டும்" என்று உத்தர விட்டார். மிருகப் பையன்களும் சந்தோஷமாக "சரி, சரி" என்று சொல்லிக் கொண்டே அன்று சாயங்காலம் வீட்டுக்குச் சென்றன. மறுநாள் காலையில் உபாத்தியாயர் சொல்லியபடி மிருகப் பையன்கள் யாவும் சீக்கிரமாகவே பள்ளிக்கூடம் வந்து சேர்ந்தன.

உபாத்தியாயர் நரியார், இன்ஸ்பெக்டர் உட்காருவதற்காக நல்ல கறுப்பு மெத்தை தைத்த நாற்காலி ஒன்றை வகுப்பில் தயாராகப் போட்டு வைத்திருந்தார். சரியாக அன்று காலை பத்து மணிக்கு உபாத்தியாயர் நரி, "சத்தம் போடாதீர்கள்" என்று சொல்லிக் கொண்டே வகுப்புக்கு வந்தார். எல்லாப் பையன்களும் சரியாக வந்திருக்கிறார்களா என்று பார்க்க, தன் வகுப்பைச் சேர்ந்த பையன்களின் பெயர் ஒவ்வொன்றையும் வாசிக்க ஆரம்பித்தார். பெரிய ஒட்டைச் சிவிங்கி, சிறிய ஒட்டைச் சிவிங்கி, நரி, குள்ள நரி, வெள்ளைப் பூனை, கறுப்புப் பூனை, குட்டி யானை என்று பெயர்களை வாசித்தார்.



பையன்கள் யாவரும் "ஆஜர், ஆஜர்" என்று சொல்லிக் கொண்டே வந்தனர். ஆனால் "முள்ளம் பன்றி" என்று பல முறை உபாத்தியாயர் நரி கூப்பிட்டும் முள்ளம் பன்றியின் குரலையே காணவில்லை.

எல்லா மிருகப் பையன்களும் சுற்று முற்றும் பார்த்தன. பார்த்து என்ன பிரயோஜனம்? முள்ளம் பன்றி அங்கு வந்திருந்தால் தானே இருக்கும்? முள்ளம் பன்றி மாத்திரம் பள்ளிக்கூடத்திற்கு வராததைப் பார்த்ததும் உபாத்தியாயர் நரிக்கு மகாக் கோபம் வந்தது. "ஏ, அணில் குட்டியே! நீ வரும் பொழுது உன் பக்கத்தில் வசிக்கும் முள்ளம் பன்றியை அழைத்து வரக் கூடாதா?" என்று கோபித்தது. அதற்கு அணில் குட்டி பயந்து கொண்டே, "சார், நான் வரும் பொழுது முள்ளம் பன்றியைக் கூப்பிட்டேன். ஆனால் அதன் தாயார் முள்ளம் பன்றி அப்பொழுதே போய் விட்டதாகச் சொன்னாள்" என்று பதில் சொல்லியது. உடனே உபாத்தியாயர் நரி, "முள்ளம் பன்றி வகுப்புக்கு வராதது என் மனதுக்கு மிகவும் கஷ்டத்தை உண்டு பண்ணுகிறது. இன்ஸ்பெக்டர் வரும்பொழுது எல்லாப் பையன்களும் வகுப்பில் ஆஜராயிருந்தால் அவருக்கு எவ்வளவு சந்தோஷமாயிருக்கும்? நானும் அவரிடம் நல்ல உபாத்தியாயர் என்று பெயர் வாங்குவேன் அல்லவா? இருக்கட்டும்; நாளைய தினம் முள்ளம் பன்றிக்குச் சரியான பாடம் கற்பிக்கிறேன்" என்று கோபத்துடன் சொல்லிற்று.

அந்தச் சமயத்தில் திடீரென்று இன்ஸ்பெக்டர் புலியாரும் வேகமாக நரியின் வகுப்பிற்குள் நுழைந்தார். தூக்கி வாரிப்போட்ட

# காலக்ஷேபம்

### போர்டில் இருந்தபடி

**ஓட்டல்காரர்:**—என், ஐயா! ‘இன்று முதல் தோசைக்குச் சர்க்கரை கிடையாது!’ என்று போர்டு எழுதிப் போட்டிருக்கிறோமே, நீர் பார்க்கவில்லையா? இன்னொரு தோசை கொண்டு வரச்சொல்லி சர்க்கரை கேட்கிறீரே?

**வந்தவர்:**—சரிதான் ஐயா, படித்துப் பார்த்துவிட்டுத்தான் கேட்கிறேன். இன்று,— முதல் தோசைக்குத்தானே சர்க்கரை கிடையாது என்று எழுதியிருக்கிறது. இரண்டாவது தோசைக்குச் சர்க்கரை கிடையாது என்று எழுதியிருக்கவில்லையே!

—நரஸிம்மன்.

★

### அண்ணா வந்தால்?

**கணவன்:**—அடியே! உன் அண்ணாவை இங்கே வந்து பத்து நாள் தங்கிப் போகும்படி கடிதம் எழுதக் கூடாதோ?

**மனைவி:**—என்னத்திற்காம்?

**கணவன்:**—அந்தப் பத்து நாளைக்காவது நல்ல சாப்பாடாய்ச் சாப்பிடலாமே என்றுதான்!

—எஸ். ஜி. ராஜன்.

★

### ‘ஸாம்பிள்’ துணி

**ஜவுளிக்கடை வியாபாரி** (தன் மனைவியிடம்):—உங்கப்பா ஏதோ சாம்பிள் துணி வேண்டுமென்று கடிதம் எழுதியிருந்தாரே, அனுப்பினாயா?

**மனைவி:**—அனுப்பினேன்.

**புருஷன்:**—ஏதாவது ‘ஆர்டர்’ கொடுத்தாரா?

**மனைவி:**—இல்லையே, பவுண்டன் பேனாவின் மசியைத் துடைப்பதற்காக வேண்டியிருந்ததாம்; அதற்காகத்தான் எழுதியிருந்தாராம்!

—எஸ். ஹேமலதா.

### சரியான காரணம்

**நண்பன்:**—நான் சித்திரக் காட்சிச் சாலைக்குச் சென்றிருந்தேன். அதில் உன் படம் ஒன்றுதான் பார்க்கும்படியாக இருந்தது. ஏனென்றால்.........

**சித்திரக்காரன்:**—உண்மையாகவா? மிகவும் சந்தோஷம். அவ்வளவு நன்றாயிருந்ததா?

**நண்பன்:**—ஏனென்றால், ஜனங்கள் மற்றச் சித்திரங்களைச் சுற்றி மொய்த்துக் கொண்டிருந்தனர்!

—எஸ். ஆர். ஜானகி.

★

### தரும ரகசியம்

ஒரு தனவந்தர் ஒரு தரும ஸ்தாபனத்திற்கு நன்கொடையாக ஆயிரம் ரூபாய்க்கு ஒரு ‘செக்’ எழுதி வசூலிக்க வந்தவரிடம் கொடுத்தார்.

**வந்தவர்:**—செக்கில் கையெழுத்துப் போட மறந்து விட்டீர்களே?

**தனவந்தர்:**—மறக்கவில்லை, என் பெயர் யாருக்கும் தெரியாமல் இருப்பதற்காகத்தான் செக்கில் கையெழுத்துப் போடவில்லை!

—எம். ரங்கநாதன்.

★

### வேலை உயர்வு

**வார்டன்** (கைதியைப் பார்த்து):—நீ ஏன் இங்கு வந்தாய்?

**கைதி:**—நான் சிறை சூப்பரின்டெண்டாகப் பிரியப்படுகிறேன்; ஆகையால் இதிலிருந்து படிப்படியாக உயரலாமல்லவா?

—எஸ். எச். லக்ஷ்மணன்.

★

### நாணய மாற்றம்

**செட்டியார்:**—என்ன ஐயா! செல்லாக் காசைக் கொடுத்து ஏமாற்றப் பார்க்கிறீரா?

**ஐயர்:**—‘செல்லும் செல்லாததற்குச் செட்டியாரிடம் போ!’ என்று சொன்னார்கள்; வந்தேன்!

—எஸ். குருஸாமி ஐயர்.

★

### மூன்று வகை

**ஆசிரியர்:**—ராமு! கிரகணங்கள் எத்தனை வகைப்படும்?

**ராமு:**—மூன்று வகைப்படும், ஸார்!

**ஆசிரியர்:**—என்னென்ன?

**ராமு:**—சூரிய கிரகணம், சந்திர கிரகணம், பாணிக்கிரகணம்.

—ஆர். எஸ். வாஸன்.

**கட்டுப்பாட்டு விலையினால்**

உற்பத்தியாளருக்கு நியாயமான விலை கிடைக்கும். சில்லறை வியாபாரிகளுக்கு நியாயமான இலாபங்கிடைக்கும். நீங்களும் எந்தப் பொருளையும் நியாயமான விலைக்கு வாங்கலாம்

# துணிவிலைக்கட்டுப்பாடு எப்படி மும்முரமாகி

# விலைகளைக் குறைத்தன

1943ஆம் ஜூன் மாதம் துணிவிலைக் கட்டுப் பாட்டுக்கட்டளை அமுலுக்கு வந்தது. அப்போது துணிகளின் விலைகள் வெகுவாக உயர்ந்திருந்தன. சாதாரணமாக ஒருவருக்கு இன்றியமையாத அளவிற்குக்கூட துணிகள் வாங்கக்கூடவில்லை. உடனடியாக, துணி விலை இறங்கியது. சேமித்து வைக்கப்பட்டிருந்த 270 கோடி கஜம் துணியை வியாபாரிகள் வெளியே கொண்டுவந்து விட்டனர். பருத்தி ஆலை முதலாளிகளின் சிறந்த கூட்டுறவினால், இந்தக் கட்டளை நன்கு அமுல் நடத்தப்பட்டது. அன்றியும் கோடிக்கணக்கான கஜம் ஸ்டாண்டர்ட் துணி உற்பத்தியானதும் இதை அமுல் நடத்தப் பெரிதும் உதவியாயிருந்தது. அதன் பிறகு பல கட்டளைகள் பிறந்து அமுல நடத்தப் பட்டுவருகின்றன.

1. விற்பனை உச்சவிலை முதன் முதலாக 1943ஆம் டிசம்பரில் ஏற்பட்டது. அது முதல் 100-க்கு 9½ வீதம் இருமுறை விலைகள் குறைந்தன.

2. அரசாங்கத்தாரே 13 ஆலைகளில் உற்பத்தியாகும் சாக்குகளை எடுத்துக்கொண்டு, கட்டுப் பாட்டு விலைகளின்படி அங்கீகரிக்கப்பட்ட வியாபாரிகள் மூலம் விநியோகித்தார்கள்.

3. நூல் விலையும் துணிவிலையும் மட்டுமன்றி நெசவு இயந்திரங்களின் விலையும் கட்டுப்பாட்டிற்குள்ளாகியிருக்கிறது. இதனால் துணி உற்பத்தி விலை குறைகிறது. எனவே, நீங்கள் வாங்கும் துணி விலையும் குறைகிறது.



துணி வியாபாரிகள் அதிக விலை சொல்லுவார்களானால், கீழ்க்கண்ட முக்கியமான முறைகளை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். அவை உங்களுக்கு ஆதரவளிக்கும்.

1. எல்லா வகைத் துணிகளின் விலையையும் நியூடில்லி, அரசாங்கப்பிரசுர மானேஜர் வெளியிட்டிருக்கிறார் அவரிடம் அந்த ஜாபிதா கிடைக்கும். விலை ரூபாய் 3—10—0 தபால் செலவில்லை.
2. ஒரு வியாபாரியைக் குறித்து பிரியாதுகள் செய்து கொள்ள வேண்டுமானால், உங்கள் ஜில்லா மாஜிஸ்திரேட்டுக்கு எழுதிக்கொள்ளுங்கள். (கட்டுப் பாட்டுக் கட்டளையின்படி அவருக்குப் பரந்த அதிகாரமுண்டு) அல்லது, மாகாணங்களிலும் சுதேச சமஸ்தானங்களிலும் சிவில்சப்ளை இலாகாவில் நியமிக்கப்பட்டிருக்கும் விசேஷ துணி அதிகாரிக்காவது எழுதிக்கொள்ளுங்கள்.
3. அரசாங்க கட்டளைப்படி விலைகள் ஒவ்வொரு துணியின் பேரிலும் முத்திரை யிடப்பட்டிருக்கிறது.

பிரியாது செய்துகொள்ளத் தயங்காதீர்கள். அப்போதுதான் குற்றவாளிகள் என்று மெய்ப்பிக்கப்படுகிறவர்கள் தண்டனைக்குள்ளாகலாம்.

# உண்மையை உணர்ந்து உங்கள் உரிமையைக் கேளுங்கள்

நியூ டில்லி கைத்தொழில் சிவில் சப்ளை இலாகா வெளியிட்டது.

AAA 1209 A TM

கேட்க நினைத்தவர், அந்தக் கேள்வியைக் கேட்க முடியாதவராகத் திகைத்தார். பிராணனைக் காட்டிலும் பிரியமானவள்; பெற்ற தாயைப்போல் பூஜித்துக் காப்பாற்றத் தக்கவள், மிருதுவான தேகத்தைக் கொண்ட அரச குமாரி, எவ்வாறு எத்தச் சேவக வேலையில் அமர முடியும் என்று திகைத்தார்.


அருச்சுனன்

"ராஜேந்திரனே! என் காரணமாக நீர் சோகத்தில் திகைக்க வேண்டாம். என்னைப் பற்றி மனக் கவலைப் படாமல் இருக்க வேண்டும். பிரபுவே! நான் ஸைரந்திரியாக விராடனுடைய அந்தப்புரத்தில் வேலைக்கு இருப்பேன். ராஜ ஸ்திரீகளுக்குத் தோழியாகவும் பரிசாரகம் செய்தும் வருவேன். என் சுதந்திரத்தையும் கற்பையும் காப்பாற்றி வருவேன். ஸைரந்திரிகளுக்கு இந்த உரிமை உண்டு. தலை மயிர் பின்னுவதிலும் அந்தப்புர ஸ்திரீகளுடன் சந்தோஷமாகச் சம்பாஷணை செய்து காலம் கழிக்கச் செய்யும் வேலையிலும் அமையப் பெறுவேன். யுதிஷ்டிரருடைய அரண்மனையில் திரௌபதி தேவிக்கு இவ்வாறே சேவை செய்து பழகியிருக்கிறேன் என்று சொல்லி, விராட ராஜனுடைய மனைவியிடம் வேலை சம்பாதித்துக் கொண்டு மறைந்து இருப்பேன்" என்றான்.

"கல்யாணி! உன்னுடைய குலத்துக்குத் தகுந்த மங்களகரமான வார்த்தையைப் பேசினாய்!" என்று யுதிஷ்டிரன் திரௌபதியின் தைரியத்தைப் பாராட்டினான்.

* * *

இவ்வாறு பாண்டவர்கள் நிர்மாணித்த பிறகு, தௌம்யர் அவர்களை ஆசீர்வதித்து, அவர்களுக்குப் புத்திமதிகளும் சொன்னார்:— ராஜக் கிரகத்தில் வேலைக்கு இருக்கிறவர்கள் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். அதிகமாகப் பேசாமல் அரசனை உபாசிக்க வேண்டும். கேட்ட பின்னரே யோசனை சொல்ல வேண்டும். கேளாமல் ஒரு போதும் அரசனுக்கு யோசனை சொல்லப் புகலாகாது. சமயம் பார்த்து அரசனைப் புகழ வேண்டும். அற்பக் காரியமாயினும் அரசனிடத்தில் தெரிவித்தே செய்ய வேண்டும். அரசன் மனித உருவம்கொண்ட நெருப்பு ஆவான். அதிகம் கிட்ட நெருங்கக் கூடாது. அலட்சியமும் செய்யக் கூடாது. எவ்வளவு நம்பிக்கையும் அதிகாரமும் பெற்ற போதிலும் எந்தச் சமயமும் உடனே நீக்கப்படலாம் என்று வாயிலைப் பார்த்த வண்ணமாகவே எப்போதும் இருக்க வேண்டும். அரசர்களிடத்தில் நம்பிக்கை வைத்தல் மூடத் தனமாகும். அரசனுடைய அன்பைப் பெற்று விட்டதாக எண்ணி அவனுடைய வாகனத்திலாவது ஆசனத்திலாவது ரதத்திலாவது ஏறக் கூடாது. அரசனிடத்தில் சேவை செய்கிறவன் சோம்பலற்று மனத்தை அடக்கினவனாகவே இருக்க வேண்டும். அரசனால் கௌரவிக்கப்பட்டாலும் அவமதிக்கப்பட்டாலும் சந்தோஷமாவது மன வருத்தமாவது காட்டக் கூடாது.

ரகசியமாகச் சொல்லப்பட்ட வார்த்தைகளை வெளியில் பேசக்கூடாது. குடிகளிடமிருந்து எந்தவிதமான பரிதானமும் வாங்கக் கூடாது. மற்ற சேவகனைப் பார்த்துப் பொறாமைப்படக் கூடாது. அறிவுள்ளவர்களை விட்டு மூடர்களை அதிகாரத்தில் அரசன் வைப்பான். அதைக் கண்டு மனக் கசப்பு அடையக் கூடாது. அரண்மனை ஸ்திரீகள் விஷயத்தில் மிகவும் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். அவர்களிடத்தில் நேசம் பாராட்டக் கூடாது.


நகுல — சகதேவன்

இவ்வாறு ராஜ சேவகர்களுக்கு வேண்டிய இன்னும் அநேக எச்சரிக்கைகளைத் தௌம்யர் உபதேசம் செய்து விட்டு, "பாண்டவர்களே! ஒரு வருஷம் விராடனிடத்தில் சேவக விருத்தியில் இவ்வாறு பொறுமையுடன் இருந்து முடித்தீர்களானால், பிறகு உங்களுடைய ராஜ்ய பதவியை அடைந்து சுகமாக வாழ்வீர்கள்" என்று ஆசீர்வதித்தார்.

மதங்கொண்ட காளைகளையும் எருமைக் கடாக்களையும் காட்டு மிருகங்களையும் அடக்கி விராடனுக்கு வேடிக்கை காட்டுவேன்'' என்றான்.

* * *

பிறகு யுதிஷ்டிரன் அருச்சுனனை நோக்கி, "நீ என்ன தொழிலில் அமரும் எண்ணம்? அப்பனே, உன் வீரியத்தை எவ்வாறு ஒளிப்பாய்?'' என்றான்.



பீமன்

வம்சத்தில் உதித்த வீரன், மேரு மலையைப் போன்றவன், விராடனிடத்தில் 'நான் நபும்சகன்; எனக்கு அந்தப்புர வேலை தா' என்று கேட்கப் போகிறானா? இதுவும் நம்முடைய விதியா?'' என்று மீண்டும் துக்கத்தில் ஆழ்ந்தான்.

இவ்வாறு அருச்சுனனைக் கேட்கும் போது அவனுடைய வீரியத்தையும் பிரதாபக் காரியங்களையும் கீர்த்தியையும் எடுத்துச் சொல்லப் புகுந்த யுதிஷ்டிரன் நிறுத்த முடியாதவனாக இருபது சுலோகங்கள் வரையில் தம்பியை வருணித்துக் கொண்டே போகிறான். புகழுக்குத் தகுந்தவன் அருச்சுனனைப்போல் உலகத்தில் வேறு யார்?

"அண்ணன்மார்களே! வில்லின் நாண் தேய்த்துத் தழும்பு ஏறிய என்னுடைய கைகளை யாரும் பார்க்காதபடி எப்போதும் ரவிக்கை தரித்து அரசனுடைய ஸ்திரீகளுக் கிடையில் அவர்களுக்கு வேலை செய்யும் நபும்ஸகனாக நான் அமர்ந்து என்னை மறைத்துக் கொள்வேன். இவ்வாறான சாபமும் எனக்கு ஊர்வசி தந்திருக்கிறாள். இந்திரனிடம் சென்றிருந்தபோது என்னை அவள் விரும்பிய காலத்தில் நீ எனக்குத் தாயைப் போன்றவள் என்று நான் மறுத்தேன். அவள் என்னை நீ புருஷத் தன்மையை இழப்பாய் என்று சபித்தாள். அந்த சாபம் நான் வேண்டும்போது ஒரு வருஷ காலம் மட்டும் என்னை அண்டும் என்று இந்திரன் அனுக்கிரகித் திருக்கிறான். அது இப்போது நமக்கு உதவும். வெண் சங்கினால் செய்யப்பட்ட வளையல்களை அணிந்து ஸ்திரீகளைப் போல் தலைமயிரைப் பின்னி விட்டுக் கொண்டு ரவிக்கை போட்டுக்கொண்டு விராடன் அந்தப்புரத்து வேலையில் இழி தொழிலில் அமர்ந்து மறைவேன். ஸ்திரீகளுக்கு நர்த்தனம், கானம் கற்பிப்பேன். யுதிஷ்டிரனுடைய அரண்மனையில் திரௌபதிக்குப் பரிசாரகம் செய்து வந்திருக்கிறேன் என்று விராடன் அந்தப்புரத்தில் சொல்லி வேலைக்கு வைத்துக் கொள்ளக் கேட்பேன்'' என்று சொல்லித் திரௌபதியைப் பார்த்துச் சிரித்தான் தனஞ்சயன்.

யுதிஷ்டிரன், "ஹா! உலகத்தில் கீர்த்தியினாலும் பராக்கிரமத்தாலும் வாசுதேவருக்குச் சமமானவன், பாரத

* * *

பிறகு தருமபுத்திரன் நகுல சகதேவர்களைப் பார்த்தான். "அப்பா, நகுலனே! அழகிய சியாமள நிறத்தவனே! சுகானுபவத்துக்குத் தகுந்தவனே! துக்கத்துக்குத் தகாதவனே! நீ என்ன வேலையில் அமரப் போகிறாய்?'' என்று பரிதபித்துக் கேட்டான்.

"நான் விராடனுடைய குதிரை லாயத்தில் வேலைக்கு இருக்கப் போகிறேன். குதிரைகளைப் பழக்குவதிலும் பார்த்துக் கொள்வதிலும் என் மனம் சந்தோஷமடையும். குதிரைகளுக்குச் செய்ய வேண்டிய வைத்தியமும் நான் நன்றாய்ப் படித்திருக்கிறேன். எந்தக் குதிரைக் குட்டியையும் என்னால் அடக்க முடியும். ஏறிச் சவாரி செய்து பழக்குவதிலும், வண்டி, தேர் முதலிய வாகனங்களில் கட்டிப் பழக்குவதிலும் நான் சாமர்த்தியம் பெற்றிருக்கிறேன். பாண்டவர்களிடத்தில் நான் குதிரைகளைப் பார்த்துக்கொண் டிருந்தேன் என்று சொல்லி நான் விராட ராஜனிடம் தகுந்த வேலை சம்பாதித்துக் கொள்வேன்'' என்றான்.

"பிருஹஸ்பதிக்குச் சமானமான புத்தி படைத்த சகதேவன், நீதி சாஸ்திரத்தில் சுக்கிரன் போன்ற நிபுணன், மந்திராலோசனையில் ஒப்பற்ற இவன் என்ன செய்வான்?'' என்றான் யுதிஷ்டிரன்.

"நகுலன் தாமக்கிரந்தியாகக் குதிரைகளைப் பார்க்கட்டும். நான் தந்திரிபாலனாக மாடுகளைப் பார்த்து வரும் வேலையில் அமரலாம் என்றிருக்கிறேன். விராடனுடைய பசுக்களையும் காளைகளையும் நோய், காட்டு மிருகங்கள் இவை அண்டாமல் காத்து வருவேன். மத்ஸ்ய ராஜனுடைய பசுக்கள் எண்ணிக்கையில் பெருகி, புஷ்டியாக வளர்ந்து நிறையப் பால் தரும்படியாகப் பார்த்து வருவேன். காளைகளின் லட்சணங்களும் எனக்கு நன்றாய்த் தெரியும்'' என்றான் சகதேவன்.

"கிருஷ்ணையே! நீ என்ன வேலை செய்ய முடியும்?'' என்று திரௌபதியைக்

கழிப்பது நலம்?" என்று தருமபுத்திரன் கேட்டான்.

அருச்சுனன், "மகாராஜாவே! யம தேவனிடம் இதற்காக வரம் பெற்றிருக்கிறீர். நாம் யாராலும் அறியப்படாமல் பன்னிரண்டு மாதங்களை எளிதாகவே கழிப்போம். எல்லாரும் ஓரிடத்திலேயே இருப்போம். கௌரவர்களுடைய நாட்டைச் சுற்றி மனத்துக்கு இனிமையான பல தேசங்கள் இருக்கின்றன. பாஞ்சால தேசம் இருக்கிறது, மத்ஸ்ய தேசம் இருக்கிறது. சால்வம், வைதேகம், பாஹ்லிகம், தசார்ணம், சூரஸேன நாடு, கலிங்கம், மகதம் இந்த நாடுகள் எல்லாம் இருக்கின்றன. இவற்றில் எது உமக்குப் பிரியமோ அந்தத் தேசத்துக்குப் போகலாம். என்னைக் கேட்டால் விராடனுடைய தேசமான மத்ஸ்ய தேசமே மேலானது என்பேன். விராட நகரம் மிக்க அழகும் ஐசுவரியமும் நிரம்பியது. உம்முடைய இஷ்டத்தைச் சொல்லவும். நீர் துக்கப்படலாகாது" என்றான்.

"மத்ஸ்ய தேசாதிபதி விராடன் மிகுந்த பலமுடைய அரசன். நம்மிடத்தில் பிரியம் வைத்திருப்பவன். தருமசீலன். வயது முதிர்ந்தவன். உறுதியான புத்தி படைத்தவன். துரியோதனன் பேச்சைக் கேளாதவன். விராடராஜன் அருகில் மறைந்து வாசம் செய்வதே நலம் என்று எண்ணுகிறேன்" என்றான் யுதிஷ்டிரன்.

"அவ்வாறே நிச்சயம் செய்வோம், அரசனே! நீர் விராடனிடத்தில் என்ன காரியத்தில் அமர்வீர்?" என்றான் அருச்சுனன்.

இவ்வாறு கேட்கும்போது அருச்சுனனுக்குத் துயரம் மேலிட்டது. "கபடமறியாத மகாத்மா ராஜாதி ராஜனாக ராஜசூய யாகம் செய்து புகழ்பெற்ற யுதிஷ்டிர மகாராஜன் மற்றொரு அரசனிடம் மாறு வேஷம் தரித்துச் சேவகத்தில் அமர நேரிட்டதே!" என்று துக்கப்பட்டான்.

யுதிஷ்டிரன் சொல்லலானான்:

"நான் விராடனிடம் ஆஸ்தான பணிவிடை வேலைக்கு என்னை எடுத்துக் கொள்ளக் கேட்கலாம் என்றிருக்கிறேன். அரசனுடன் உட்கார்ந்து பாச்சிகை விளையாட்டு விளையாடி அதில் சாமர்த்தியம் காட்டிச் சந்தோஷப்படுத்துவேன். சந்நியாசி வேஷம் தரித்துக் கங்கன் என்று பெயரிட்டுக் கொண்டு சொக்கட்டான் விளையாடுவதோடு, அரசனுக்கு ஜோதிடம், பட்சி முதலிய சகுனங்கள், வேதம், வேதாங்கங்கள், நீதி சாஸ்திரம் முதலியவற்றில் பண்டிதனாக இருந்து அரசனைச் சந்தோஷப்படுத்துவேன். சபைப் பணிவிடையும் செய்வேன். நான் முந்தி யுதிஷ்டிரனுக்குப் பிராண சிநேகிதனாக இருந்தேன் என்று சொல்லி ஜாக்கிரதையாகவே இருந்து வருவேன். நீங்கள் என்னைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம். பீமசேனனே! விராடனிடம் நீ எந்த விதமான வேலையில் அமர்வாய்? யக்ஷ ராக்ஷதர்களை அடக்கினவனே! பிராமணனுக்காகப் பகாசுரனை வதம் செய்து ஏகசக்ர புரத்தைக் காப்பாற்றினாய். ஹிடிம்பனைக் கொன்றாய். ஜடாசுரனை வதம் செய்து எங்களைப் பிழைப்பித்தாய். கோபமும், பலமும் பொங்கி வழியும் வீரனாகிய நீ மத்ஸ்ய ராஜனிடத்தில் எவ்விதம் அடங்கி ஒடுங்கி எந்த வேலையில் அமர்வாய்?" என்று கண்களில் நீர் ததும்பப் பீமனைக் கேட்டான்.

பீமசேனன், "நராதிபனே! நான் விராடன் அரண்மனையில் சமையல் வேலை கேட்டுப் பெறலாம் என்று இருக்கிறேன். எனக்கு மடைப்பள்ளி வேலை நன்றாகத் தெரியும் என்பதை அறிவீர்கள். இதற்கு முன் விராடன் கண்டிராத ருசியுள்ள பதார்த்தங்களைப் பக்குவம் செய்து அவனைத் திருப்திப் படுத்துவேன். காட்டிலிருந்து மரங்களை வெட்டி அடுப்புக்கு ஏராளமாக விறகுச் சுமைகளைக் கொண்டு வந்து போடுவேன். அரசனிடம் வரும் குஸ்திக்காரர்களுடன் போட்டி போட்டு மல் யுத்தத்தில் அவர்களை வென்று ராஜாவுக்கு மகிழ்ச்சி உண்டாக்குவேன்" என்றான்.



தருமன்

இதைச் சொல்லவும் யுதிஷ்டிரனுக்குக் கவலை உண்டாயிற்று. குஸ்தியில் பீமன் புகுந்தானானால் ஆபத்து என்பது அவன் பயம். உடனே பீமன் அவனுக்குச் சமாதானம் சொன்னான்:

"நான் யாரையும் கொல்ல மாட்டேன். நன்றாகக் கசக்கித் துன்பப் படுத்துவேனே யொழிய யம லோகத்துக்கு அனுப்பிவிட மாட்டேன்.

# அடிமைத் தொழில்



## சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

"பிராமணோத்தமர்களே! நாங்கள் திருதராஷ்டிர குமாரர்களால் வஞ்சிக்கப்பட்டு ராஜ்யம் இழந்து தரித்திர நிலை அடைந்தோமானாலும் சந்தோஷமாக வனத்தில் உங்களோடு இவ்வளவு காலம் கழித்தோம். பதின்மூன்றாவது வருஷம் வந்துவிட்டது. இனி துரியோதனனுடைய ஒற்றர்களால் கண்டு பிடிக்கப்படாமல் பன்னிரண்டு மாதம் கழிக்க வேண்டும். திருதராஷ்டிரர்களிடம் பயந்தோ பொருள் பெற்றோ அதர்ம வழிகளில் அவர்களுக்கு உதவி செய்ய வேண்டும் என்று எண்ணுகிறவர்களுக்கு நாம் இன்னார் என்று தெரியாமல் மறைந்திருந்து பன்னிரண்டு மாதங்கள் கழிக்க வேண்டும். இப்போது உங்களை விட்டுப் பிரிய வேண்டியிருக்கிறது. நாங்கள் ராஜ்யத்தை மறுபடி அடைந்து உங்களோடு சேர்ந்து சுகமாகச் சத்ருக்களைப் பற்றிப் பயப்படாமல் வாழும் காலம் என்று வருமோ, அது ஈசுவரனுக்குத் தெரியும். இப்போது உங்கள் ஆசீர்வாதத்தைக் கேட்கிறேன்!" என்று யுதிஷ்டிரன் அது வரையில் தங்களுடன் வசித்து வந்த பிராமணர்களைப் பார்த்துச் சொன்னான். சோகத்தினால் அவனுடைய குரல் தடுமாறிற்று.

*   *   *

தௌம்யர் சமாதானம் செய்து, "அப்பனே! கற்றறிந்தவனாகிய நீ இவ்வாறு மனம் தளர்தல் ஆகாது. நீ மனத்தை அடக்கியவன். தைரியமாகச் செய்ய வேண்டியதை யோசிப்பாயாக. தைத்யர்களால் வஞ்சிக்கப்பட்ட இந்திரன் முன் நாட்களில் பிராமண வேஷம் தரித்து நிஷத தேசத்தில் மறைந்து வாசம் செய்யவில்லையா? அவ்வாறு ஒளிந்திருந்து இந்திரன் தன்னுடைய பகைவர்களுடைய பலத்தை அழிக்கும் காரியங்களைச் செய்தான். நீயும் அவ்வாறே செய்ய வேண்டும். மகாவிஷ்ணுவானவர் காரிய சாதனத்திற்காக அதிதி வயிற்றில் கர்ப்பப் பையில் ஒடுங்கியிருந்து மனிதனாகப் பிறந்து பிரம்மசாரியாக வேஷம் தரித்து, பலியினிடமிருந்து ராஜ்யத்தை அடைந்து உலகத்தைக் காப்பாற்றினாரல்லவா? சர்வேசுவரனான நாராயணன் விருத்ராசுரனை வெல்லுவதற்காக இந்திரனுடைய வஜ்ராயுதத்தில் பிரவேசித்து மறையவில்லையா? தேவகாரியமாக அக்கினி பகவான் ஜலத்தில் மறையவில்லையா? சூரியன் தினசரி பூமியில் மறைந்து நிற்பதைக் காணவில்லையா? ராவணனைச் சம்ஹாரம் செய்வதற்காக மகாவிஷ்ணு தசரதனுடைய வீட்டில் மனிதனாகப் பிறந்து துக்கப்பட்டுப் பல்லாண்டுகள் கழிக்கவில்லையா? இவ்வாறு பூர்வத்தில் அநேக மகாத்மாக்கள் மறைந்து ஒளிந்து வாசம் செய்து காரிய சித்தி அடைந்திருக்கிறார்கள். அப்படியே நீயும் பகைவரை வென்று பாக்கியம் பெறு" என்று தேற்றினார்.

*   *   *

யுதிஷ்டிரன் பிராமணர்களிடம் அனுமதி பெற்று அவர்களையும் மற்ற எல்லாப் பரிவாரத்தையும் ஊருக்குத் திரும்பிப் போகச் சொன்னான். அவர்களும் அவ்வாறே நகரத்துக்குப் போய்ப் பாண்டவர்கள் எங்களை நடு நிசியில் விட்டுவிட்டு எங்கேயோ போய்விட்டார்கள் என்று சொல்ல, ஜனங்கள் மிகவும் துயரமடைந்தார்கள்.

பாண்டவர்கள் வனத்தில் ஒரு தனியான இடத்தில் உட்கார்ந்து யோசிக்கலானார்கள். "அர்ஜுனா! நீதான் உலக விவகாரம் நன்றாகத் தெரிந்தவன். பதின்மூன்றாவது வருஷத்தை எந்த இடத்தில்

னும் மாதிரி. நாம் ஏன் வித்தியாசப் படுத்திப் பேச வேண்டும்?"

"எது எப்படியாவது இருக்கட்டும். இரண்டு பேரும் நம் ஊரில் விருந்துண்ணாமல் போகக்கூடாது! அதற்கு வேண்டிய ஏற்பாடு செய்யுங்கள்!"

இந்த மாதிரி பலவிதமான பேச்சுக்களையும் காதில் வாங்கிக் கொண்டு சிவகாமி மடத்துக்குப் போய்ச் சேர்ந்தாள். அவளுடைய உள்ளம் அளவில்லாத பெருமையையும் சொல்ல முடியாத வேதனையையும் மாறி மாறி அடைந்து கொண்டிருந்தது.

* * *

கிராம வாசிகளின் விருப்பத்தின்படியே மாமல்லரும் பரஞ்சோதியும் பரஞ்சோதியுடன் வந்த வீரர்களும் கிராம வாசிகள் அவசரமாகப் பக்குவம் செய்து அன்புடன் அளித்த விருந்தை உண்டார்கள்.

விருந்து முடியும்போது அர்த்த ராத்திரிக்கு மேலே ஆகி விட்டது. பொழுது விடிந்த பிறகு புறப்படலாம் என்று கிராமப் பெரியோர்கள் கேட்டுக் கொண்டது பயன்படவில்லை. இரவுக்கிரவே கிளம்ப வேண்டியது அவசியமா யிருந்தது.

கிளம்புகிற சமயம் வந்தபோது, ஆயனரிடமும் சிவகாமியிடமும் விடை பெற்றுக் கொள்ள மாமல்லர் மடத்துக்குள்ளே சென்றார்.

"ஆயனரே! இந்த மூன்று நாளும் எத்தனையோ சந்தோஷமா யிருந்தது. உங்களிடம் விடை பெறுவது எனக்கு சங்கடமாய்த்தா னிருக்கிறது. ஆயினும் என்ன செய்யலாம்! புலிகேசியின் படைகள் காஞ்சியை நெருங்கி வந்து கொண்டிருக்கின்றனவாம். உடனே என்னை அழைத்து வரும்படி சக்கரவர்த்தி சொல்லி யனுப்பி யிருக்கிறார். இப்போதே புறப்பட வேண்டி யிருக்கிறது" என்றார் மாமல்லர்.

நாகநந்தியின் நஞ்சு தோய்ந்த வார்த்தைகளைக்கூட நம்பாதவரும், மாமல்லரிடம் அளவில்லாத அன்பும் மரியாதையும் உள்ளவருமான ஆயனர், "பிரபு! இவ்வளவு நாள் தாங்கள் இங்கிருந்தது நாங்கள் செய்த பாக்கியம். இதற்கு மேல் நாங்கள் ஆசைப்படக் கூடாது. போய் வாருங்கள். உங்களை வழி அனுப்ப நாங்களும் நதிக்கரை வரையில் வரலாமல்லவா?" என்றார்.

"அவசியமில்லை; இஷ்டப் பட்டால் வாருங்கள்!" என்றார் மாமல்லர்.

சிவகாமியை அவர் நோக்கியபோது, அவள் வேறு பக்கம் பார்த்துக் கொண்டிருந்தாள்.

இருவருக்கும் மத்தியில் திடீரென்று ஒரு திரை விழுந்து விட்டது போலிருந்தது.

* * *

இரவு மூன்றாம் ஜாமம் முடியும் சமயத்தில், சந்திரன் மேல் வான வட்டத்தின் அடியில் பிரகாசித்துக் கொண்டிருந்தபோது, வராக நதியில் ஆயத்தமாக நின்ற படகுகளில் மாமல்லர், பரஞ்சோதி முதலியோர் ஏறிக் கொண்டார்கள்.

கரையிலே கிராம வாசிகளும், ஆயனரும் சிவகாமியும் நின்றார்கள். இத்தனை நேரமும் எங்கேயோ போய் இருந்துவிட்டு அப்போதுதான் ஓட்ட ஓட்டமாய்த் திரும்பி வந்திருந்த குண்டோதரனும் பின்னால் நின்றான்.

நதிக்கரையிலும் மாமல்லர் சிவகாமியுடன் பேசுவதற்கு வசதி கிடைக்கவில்லை. படகில் ஏறிக்கொண்டதும் அவர் கரையிலிருந்த சிவகாமியை உற்று நோக்கினார். அந்தப் பார்வையில் அன்புடன் ஓரளவு கோபமும் கலந்திருந்தது.

நல்லவேளையாக, சிவகாமியும் அவரை அப்போது ஆர்வத்துடன் ஏறிட்டுப் பார்த்தாள்.

மாமல்லரின் பார்வையில் கோபம் நீங்கி அன்பும் கனிவும் மிகுந்தன.

ஏதாவது சொல்ல வேண்டுமென்று அவருடைய உதடுகள் துடித்தன. ஆனால் வார்த்தை ஒன்றும் வரவில்லை.

அதற்குள் தளபதி பரஞ்சோதி "விடு படகை!" என்று கட்டளையிட்டார்.

படகு சென்றது. சிவகாமிக்கு, தன் வாழ்நாளின் இன்பத்தை யெல்லாம் அந்தப் படகு கொண்டு போவது போல் தோன்றியது.

"ஆ! மகேந்திர சக்கரவர்த்திக்கு யுத்த தந்திரம் இன்னொருவர் சொல்லிக் கொடுக்க வேண்டுமா? அவருக்குத் தெரியாததா?"

"என்ன இருந்தாலும், நீ வேணுமானால் பார்! மாமல்லர் கோட்டைக்குள் ஒளிந்து கொள்ளச் சம்மதிக்கமாட்டார். காஞ்சிக்கு வெளியே புலிகேசியுடன் சண்டையிட்டே தீர வேண்டும் என்பார்!"

"மாமல்லரைவிடப் பரஞ்சோதி பெரிய வீரர் என்கிறார்களே?"

"அதெல்லாம் ஒன்றுமில்லை; இரண்டுபேரும் சமமானவர்கள் தான்!"

"யார் சொன்னது? மாமல்லருக்குச் சமமான வீரர் உலகத்திலேயே கிடையாது. அதற்கென்ன? பரஞ்சோதியைப் போர்க்களத்திற்குச் சக்கரவர்த்தி அழைத்துப் போயிருந்தார். அதனால் அவருடைய வீரம் வெளியாயிற்று. மாமல்லர் முதன் முதலில் புள்ளலூர்ச் சண்டையில் தானே நேரில் கலந்து கொண்டார்? அங்கே என்ன ஆயிற்று? பரஞ்சோதி இருந்த இடம் தெரியாமல் போய்விடவில்லையா?"

"அவர்களுக்குள்ளே வித்தியாசமே கிடையாது. அர்ச்சுனனும் பீமசேன



"நான்தான் சொன்னேனே, முகத்தில் இராஜ களை வடிகிறதென்று? கேவலம் சிற்பியின் முகமா அது?"

"தகப்பனாரைப் போலவே புதல்வரும் வேஷம் போடுவதில் சமர்த்தர் போலிருக்கிறது!"

"ஒரு வேஷமும் போடாமல் அல்லவா நம்மை ஏமாற்றி விட்டார்?"

"ஆயனர் குடும்பத்தைக் காப்பாற்றுவதற்காகவே இந்த வெள்ளத்தில் அகப்பட்டுக் கொண்டாராமே?"

"என்னதான் அபிமானம் இருந்தாலும் அவ்வளவு தூரத்துக்குப் போயிருக்கக் கூடாது. ஏதாவது அபாயம் நேர்ந்திருந்தால் இராஜ்யம் என்ன கதி ஆகிறது?"

"நம்முடைய கிராமம் செய்த அதிர்ஷ்டம், அப்பா!"

"இப்பேர்ப்பட்ட வீரப் புதல்வரும் சூர தளபதியும் இருக்கும் போது சக்கரவர்த்தி எதற்காகக் கோட்டைக்குள் ஒளிந்துகொள்ள ஆயத்தம் செய்கிறாராம்? அதுதான் தெரியவில்லை!"

"உளறாதே! காரணம் இல்லாமல் மகேந்திர சக்கரவர்த்தி எதுவும் செய்ய மாட்டார்!"



களின் புன்னகையில் என் இருதயத்தின் தாபம் தணிவதை உணர்ந்து அறிந்து கொள்வேன். 'இவள்தான் என் சிவகாமி! ஜன்ம ஜன்மங்களிலெல்லாம் என் உயிரிலே கலந்த இன்ப ஒளி இவள்தான்; சரத்கால சந்திரனின் மோகன நிலவில் நான் பார்த்துப் பார்த்து மகிழ்ந்த சௌந்தரிய வதனம் இதுதான்; இந்தக் கருங் குவளைக் கண்களிலேதான் என்னுடைய விழிகளாகிற வண்டுகள் ஓயாது மொய்த்து மதுவருந்தி மயங்கின!' என்று தெரிந்து தெளிவேன். சிவகாமி, வாக்குறுதி போதுமா? திருப்தி யடைந்தாயா?"

மாமல்லரின் கவி இருதயத்தி லிருந்து பிரவாகமாய்ப் பொழிந்த அமுதச் சொற்கள் சிவகாமியைத் திக்கு முக்காடச் செய்தன. அவளுடைய தேகம் சிலிர்த்தது; புளகாங்கிதம் உண்டாயிற்று; தரையிலே நிற்கிறோமா, வான வெளியில் மிதக்கிறோமா என்று தெரியாத நிலையை அடைந்தாள்.

திடீரென்று கலகலத்வனியையும், "அதோ மாமல்லர்!" "அதோ பல்லவ குமாரர்!" என்ற குரல்களையும், "குமார சக்கரவர்த்தி மாமல்ல பல்லவேந்திரர் வாழ்க!" "வாழ்க! வாழ்க!!" என்ற கோஷங்களையும் கேட்டுச் சிவகாமி சுயப் பிரக்ஞை அடைந்தாள்.

மெல்லிய குரலில், "பிரபு! எனக்குத் திருப்திதான்! தாங்கள் முன்னால் செல்லுங்கள்!" என்று கூறினாள்.

## அத்தியாயம் 40

## "விடு படகை!"

கூட்டத்தில் எல்லாருக்கும் முன்னதாகத் தளபதி பரஞ்சோதி விரைந்து வந்து மாமல்லருக்கு வணக்கம் செலுத்தி, "பிரபு! இதென்ன இப்படிச் செய்து விட்டீர்கள்? எங்களையெல்லாம் கதிகலங்க அடித்து விட்டீர்களே?" என்றார். மாமல்லர் பரஞ்சோதியை அன்புடன் ஆலிங்கனம் செய்து கொண்டு, "மன்னிக்க வேண்டும், தளபதி! உங்களுக்கெல்லாம் ரொம்பவும் கவலைதான் அளித்து விட்டேன். அப்புறம் நீங்கள் என்ன செய்தீர்கள்? வெள்ளத்தினால் நமது படையில் சேதம் அதிகம் உண்டா?" என்று கேட்க, பரஞ்சோதி, "சூலபாணியின் அருளால் நல்ல சமயத்தில் எச்சரிக்கப் பட்டோம். அதனால் உயிர்ச் சேதம் ஒன்றுமில்லை. எத்தனையோ விஷயங்கள் சொல்ல வேண்டும்; பேசவேண்டும். வாருங்கள், பிரபு! இந்தக் கோயிலுக்குள் சிறிது போய்ப் பேசலாம்!" என்று கூறினார். இருவரும் கைகோத்துக் கொண்டு உற்சாகமாக நடந்து சென்று முன் கோபுர வாசல் வழியாகக் கோயிலுக்குள் பிரவேசிக்க, பின்னோடு கூட்டமாக வந்த கிராம வாசிகள் கோயிலுக்குள் செல்லாதபடி வீரர்கள் தடுத்து நின்றார்கள்.

மாமல்லரும் பரஞ்சோதியும் அவ்விதம் குதூகலமாகப் பேசிக்கொண்டு போனதையும், சற்றுப் பின்னால் மரத்தடியில் நின்ற தன்னை யாரும் கவனியாததையும் கண்ட சிவகாமிக்கு ஏனோ வேதனை உண்டாயிற்று. தான் அங்கிருப்பது தெரிந்தும் பரஞ்சோதி வேண்டுமென்றே தன்னைக் கவனியாமல் போகிறார் என்று அவள் உள்ளுணர்ச்சி கூறியது. தளபதியைத் தொடர்ந்து வந்த கூட்டமும் அவர்களுக்குப் பின்னால் போய் விட்டது. ஆயனரும் அவரோடு வந்த ரதியும் சுகரும் மட்டும் சிவகாமி நிற்குமிடம் வந்தார்கள். "இனிமேல் நீங்கள்தான் எனக்குத் துணை; நீங்கள்தான் என் உண்மையான சிநேகிதர்கள்!" என்று கூறுவதுபோல், ரதியையும் சுகரையும் சிவகாமி தடவிக் கொடுத்தாள். முன்னால் சென்ற கூட்டத்தின் ஆரவாரம் சற்று அடங்கியதும் இவர்களும் மடத்தை நோக்கிச் சென்றார்கள்.

வழியில் கோயில் வாசலை நெருங்கிச் சென்றபோது, அங்கே கூடியிருந்த கிராமவாசிகள் சிலர் பேசிக் கொண்டிருந்த வார்த்தைகள் சிவகாமியின் காதிலும் விழுந்தன.

"பல்லவ குமாரர் இப்படி நம்மை ஏமாற்றி விட்டாரே!"

றேன். என்ன சொல்கிறாய்?'' என்று கொஞ்சும் குரலில் கெஞ்சிக் கேட்டார் மாமல்லர்.

சிவகாமி அவருடைய கரத்தைத் தன் முகவாயிலிருந்து எடுத்துத் தன் கண்களிலே சேர்த்துக் கண்ணீரால் நனைத்த வண்ணம், ''மாட்டேன், பிரபு! மாட்டேன்! வீர மன்னர் குலத்தில் உதித்த வீரப் புதல்வராகிய உங்களைப் போர்க்களம் போக வேண்டாமென்று நான் தடுக்க மாட்டேன். ஆனால் இந்தப் பேதை நெஞ்சம் ஏனோ காரணமில்லாத பீதி கொண்டிருக்கிறது. என் வாழ்வின் இன்பம் இன்றோடு முடிந்து விட்டது போல் தோன்றுகிறது. பிரபு! சற்று முன்னால் தாங்கள் கேட்டபோது 'வாக்குறுதி வேண்டாம்' என்று சொன்னேன். அந்தத் தைரியம் இப்போது எனக்கில்லை. வாக்குறுதி கொடுத்துவிட்டுப் போங்கள். என்னை மறக்க மாட்டீர்கள் அல்லவா? மத்த யானையின் மேலேறி யுத்த களத்தில் சத்ருக்களைத் துவம்ஸம் செய்யும் போதாகட்டும், அகில சாம்ராஜ்யத்தின் சக்கரவர்த்தியாகி மணி முடி தரித்து ரத்தின சிங்காதனத்தில் அமர்ந்திருக்கும் போதாகட்டும், இந்த ஏழைச் சிற்பியின் மகளை மறவாமலிருப்பீர்கள் அல்லவா?'' என்று கேட்டாள்.

''இவ்வளவுதானே கேட்கிறாய், சிவகாமி!'' என்றார் மாமல்லர். வானக் கடலிலே மிதந்த பூரண சந்திரனைச் சுட்டிக் காட்டி, ''சிவகாமி! அதோ, அமுத நிலவைச் சொரிந்து கொண்டு வான வீதியில் பவனி வரும் சந்திரன் சாட்சியாகச் சொல்கிறேன், கேள்! இந்த ஜன்மத்தில் உன்னை நான் மறக்கமாட்டேன் என்று வாக்குறுதி கூறுவதில் பொருள் இல்லை. நான் முயன்றாலும் அது முடியாத காரியம். உன் மனதில் காரணம் இன்றித் தோன்றும் பீதிக்கு ஏதாவது உண்மையில் காரணம் இருக்குமானால், ஒன்றே ஒன்றுதான் இருக்க முடியும். ஒருவேளை போர்க் களத்தில் நான் வீர மரணம் அடைவேன்......''

''ஐயோ! அப்படிச் சொல்லாதீர்கள். ஒருநாளும் அப்படி நேராது!'' என்று சிவகாமி விம்மலுடன் உரத்துக் கூவினாள்.

மாமல்லர் சொன்னார் :—''அப்படி நேரவில்லையென்றால், உன்னை நான் மறப்பது என்ற பேச்சுக்கே இடமில்லை. யுத்தமெல்லாம் முடிந்து இந்தப் பரந்த பல்லவ சாம்ராஜ்யத்துக்குச் சக்கரவர்த்தியாகி நான் ரத்தின சிங்காதனத்தில் வீற்றிருக்கும் காலம் வரும்போது, நீயும் என் அருகிலேதான் வீற்றிருப்பாய். ஆனால், போர்க் களத்துக்குப் போகும்போது, வெற்றி அல்லது வீர மரணத்தை எதிர் பார்த்துத்தான் போக வேண்டும். ஒரு வேளை நான் போர்க் களத்தில் உயிர் துறக்க நேர்ந்தால் என்ன, சிவகாமி! எதற்காகக் கவலைப்பட வேண்டும்? இந்த ஒரு பிறப்போடு, ஒரு ஜன்மத்தோடு, நமது காதல் முடிந்துவிட்டதா? ஒருநாளும் இல்லை. போர்க்களத்தில் உயிர் போகும்போது எனக்கு நினைவிருந்தால் பிறை சூடும் பெருமானைத் தியானித்து, 'எனக்குப் பிறவா வரம் தாருங்கள்' என்று நான் கேட்க மாட்டேன். 'இந்தப் புண்ணிய பாரத பூமியிலே, பாலாறும் பெண்ணையும் காவேரியும் அமுதப் பிரவாகமாய்ப் பெருகும் தமிழகத்திலே, மீண்டும் மீண்டும் வந்து பிறக்கும் வரம் தாருங்கள்' என்றுதான் கேட்பேன். அவ்விதமே இந்தத் தமிழகத்தில் பிறந்து, ஊர் ஊராய் அலைந்து திரிவேன். பூர்வ ஜன்மங்களிலே நான் காதலித்த சௌந்தர்ய வடிவத்தை, மோகன உருவத்தை, ஜீவனுள்ள தங்க விக்கிரகத்தைத் தேடிக் கொண்டு அலைவேன். இம்மாதிரி கார்த்திகை மாதத்துத் தாவள்யமான நிலவொளியிலே உன்னை ஒரு நாள் காண்பேன். கண்டதும் தெரிந்துகொள்வேன், நீதான் என்று. இந்தப் பெண்ணின் முகத்திலே ததும்பும் சௌந்தரியம் இவளுக்குச் சொந்தமானதில்லை, பல ஜன்மங்களிலே தொடர்ந்து வந்த என் காதல்தான் இந்த முகத்துக்கு இந்த மோகனத்தை அளித்திருக்கிறது' என்று தெரிந்து கொள்வேன். உன் கண்களில் ஜொலிக்கும் மின் ஒளியிலே என் உயிரின் சுடரைக் கண்டு தெரிந்து கொள்வேன். உன் இதழ்

வந்திருப்பான்?" என்று எண்ணமிட்டுக் கொண்டுதானிருந்தது.

* * *

இப்போது மடத்து வாசலில் கூட்டத்தைக் கண்டதும், அதிலும் வாள்கள் வேல்களின் ஒளியைக் கண்டதும், மாமல்லருடைய மனதில் ஏக காலத்தில் பல கேள்விகள் எழுந்தன. இவர்கள் யார்? பகைவர்களா? பல்லவ வீரர்களா? பல்லவ வீரர்களாயிருந்தால், இங்கு நாம் இருப்பது தெரிந்து வந்திருக்கிறார்களா? தெரிந்தவர்களாயிருந்தால், திடீரென்று நம்மைக் கண்டதும் கோஷம் இடுவார்களே? கிராம வாசிகளுக்குத் தெரிந்துவிடுமே? ஒருவேளை குண்டோதரன் அழைத்து வந்திருக்கிறானா? என்ன சொல்லி அழைத்து வந்திருப்பான்?

மாமல்லருடைய மனத் தயக்கத்தையும் அதன் காரணத்தையும் ஒருவாறு அறிந்துகொண்ட ஆயனர், "பிரபு! தாங்களும் சிவகாமியும் சற்று இவ்விடமே நில்லுங்கள். நான் முன்னால் சென்று வந்திருப்பவர்கள் யார் என்று பார்க்கிறேன். குண்டோதரன் இருந்தால் சொல்லியனுப்புகிறேன். இல்லாவிடில் நானே திரும்பி வருகிறேன். அதுவரையில் தாங்கள் இங்கேயே இருங்கள்!" என்று கூறி விட்டு மேலே சென்றார்.

அவ்விதமே சிவகாமியும் மாமல்லரும் கோயில் மதில் ஓரமாக, மதிளுக்குள்ளிருந்து கப்புங் கிளையுமாய் வெளியே படர்ந்திருந்த மந்தார மரத்தின் அடியில் நின்றார்கள். அப்போது மாமல்லர் மடத்து வாசலில் நின்ற கூட்டத்திலிருந்து வந்த சத்தத்தைக் காது கொடுத்துக் கவனமாய்க் கேட்டார். கலகலவென்று எழுந்த பல பேச்சுக் குரல்களுக்கிடையில் தளபதி பரஞ்சோதியின் குரல் "மாமல்லர் எங்கே?" என்று கணீரெனக் கேட்டது. இதற்குக் கிராம வாசிகள் பலர் ஏக காலத்தில் மறுமொழிகள் கூறினார்கள். அந்தப் பல குரல்களுடன் சுகப்பிரம்ம முனிவரும் சேர்ந்து, "மாமல்லா! மாமல்லா!" என்று கீச்சுக் குரலில் கூவிய சத்தம் எழுந்தது.

மாமல்லர் மனக் குழப்பமெல்லாம் ஒரு நொடியில் நீங்கி விட்டது. "நமது தளபதிதான் வந்திருக்கிறார்! பரஞ்சோதி தான் வந்திருக்கிறார்! வா, சிவகாமி! நாமும் போகலாம்!" என்று அவர் உற்சாகம் ததும்பும் குரலில் கூறி மேலே நடக்கத் தொடங்கிய போது, சிவகாமி அவருடைய கரத்தை மெதுவாகத் தொட்டு, "பிரபு!" என்றாள். மந்தார மரத்துக் கிளைகளின் வழியாக வந்த பால் நிலவின் ஒளியில் அவளுடைய கண்களில் துளித்திருந்த இரு கண்ணீர்த் துளிகளும் முத்துப் போல் பிரகாசித்ததை மாமல்லர் பார்த்தார்.

"என் கண்ணே! இது என்ன?" என்று மாமல்லர் அருமையுடன் கூறி, தன் அங்க வஸ்திரத்தினால் அவளுடைய கண்ணீரைத் துடைத்தார்.

"ஒரு கண நேரத்தில் என்னை மறந்து விட்டீர்கள் அல்லவா? உங்கள் தளபதியின் குரல் கேட்டதும் இந்தப் பேதைப் பெண் அவசியமில்லாமல் போய்விட்டேனல்லவா?" என்று சிவகாமி விம்மினாள்.

இவ்விதம் நேரும் என்று சற்றும் எதிர்பாராத மாமல்லர் அவளுக்கு எவ்விதம் தேறுதல் சொல்வதென்று தெரியாமல் சற்றுத் திகைத்து நின்றார். "அசடே! இது என்ன பேதைமை?..." என்று ஆரம்பிக்க எண்ணியவர், அதை மாற்றிக் கொண்டு, "என் செல்வமே! என் ஆருயிரே! ஏன் இவ்விதம் பேசுகிறாய்? சற்று முன்னால் நீதானே உன் வாயார வீர மொழிகள் புகன்று என்னைப் போர்க்களத்துக்குப் போகும்படி ஏவினாய்? போகவேண்டிய சமயம் வந்திருக்கும் போது இவ்விதம் நீ கண்ணீர் விட்டால், நான் என்ன தைரியத்துடன் போவேன்?" என்று கூறி, சிவகாமியின் அழகிய முகவாயைப் பிடித்து நிமிர்த்தினார். அப்போது சிவகாமியின் முகத்தில் நிலா மதியின் கிரணங்கள் நேராக விழ, அவளுடைய இயற்கைப் பொன்னிற முகம் தங்க நிறம் பெற்றுத் திகழ்ந்தது.

"கண்ணே! இப்போது கூட மோசம் போய்விடவில்லை. உன் கனிவாய் திறந்து, 'நீங்கள் போருக்குப் போக வேண்டாம்!' என்று சொல்லு; நான் இங்கேயே இருந்து விடுகிறேன். தளபதியைத் திருப்பி அனுப்பி விடுகி

# சிவகாமியின் சபதம்



## அத்தியாயம் 39

## சந்திரன் சாட்சி

இரவு ஜாம நேரத்துக்கு மேல் மாமல்லர், சிவகாமி, ஆயனர் ஆகியோர் திரும்பிக் கிராமத்தை அடைந்தபோது, நாவுக்கரசர் மடத்து வாசலில் ஏகக் கூட்டம் நிற்பதைக் கண்டார்கள்.

நிலா வெளியில் அந்தக் கூட்டத்தின் மத்தியில் கத்தி கேடயங்களும், வாள்களும் வேல்களும் மின்னின.

மூன்று பேரும் துணுக்கமடைந்து வீதி முனையில் கோயில் மதில் ஓரமாக ஒதுங்கி நின்றார்கள். மடத்து வாசலில் நின்ற வீரர்கள் யாரா யிருக்கும் என்ற கேள்வி மூவருடைய மனதிலும் ஏக காலத்தில் எழுந்தது.

* * *

அன்று காலையில் குண்டோதரனுக்கும் மாமல்லருக்கும் ஒரு சிறு வாக்குவாதம் நடந்தது. மேலே நடக்க வேண்டிய காரியத்தைப் பற்றித்தான். வராக நதியில் வெள்ளம் வடிந்து விட்டபடியால், பானைத் தெப்பம் ஒன்று கட்டி, அதில் தம்மை வராக நதிக்கு அக்கரையில் கொண்டு போய் விட்டுவிட்டுக் குண்டோதரன் திரும்பி வந்துவிட வேண்டும் என்றும், தாம் அங்கிருந்து காஞ்சிக்குப் போய் விடுவதாகவும், குண்டோதரன் ஆயனருக்கும் சிவகாமிக்கும் துணையாக மண்டபப் பட்டு கிராமத்திலேயே இருக்கவேண்டும் என்றும் மாமல்லர் சொன்னார்.

குண்டோதரன் இதை மறுத்து, தான் முதலில் அக்கரை சென்று பல்லவ சைன்யத்தைப் பற்றித் தகவல் விசாரித்து வருவதாகவும், அதற்குப் பிறகு என்ன செய்வதென்பதை முடிவு செய்து கொள்ளலாமென்றும், எப்படியிருந்தாலும் மாமல்லர் தன்னந் தனியாகக் காஞ்சி போவதென்பது கூடாத காரியம் என்றும், அவசியமானால் இரண்டு குதிரைகள் சம்பாதித்து இரண்டு பேருமாகக் காஞ்சி போகலாமென்றும், பிறகு தான் திரும்பி மண்டபப் பட்டு வந்து சேர்ந்து ஆயனருக்குத் துணை யிருப்பதாகவும் கூறினான். மாமல்லரும் இன்னும் ஒரு நாள் சிவகாமியுடன் இருக்கலாம் என்ற ஆசையினால் அதற்கு இணங்கினார்.

ஆனாலும் அன்றைக் கெல்லாம் அவருக்கு அடிக்கடி மனதில் பரபரப்பு உண்டாகிக் கொண்டிருந்தது. சாயங்காலம் ஆக ஆக, "குண்டோதரன் ஏன் இன்னும் வரவில்லை?" "எத்தனை நாள் இங்கே சும்மா உட்கார்ந்திருப்பது?" என்ற எண்ணங்கள் தோன்றி அல்லல் செய்தன.

மோகன நில வெளியில் சிவகாமியுடன் காதல் பேச்சுக்களைப் பேசிக் கொண்டிருந்த போதுகூட நடுநடுவே மாமல்லரின் மனம் "குண்டோதரன் இதற்குள் வந்திருப்பானா? என்ன செய்தி கொண்டு

# வான சஞ்சாரம்

இசைத் தேனீ

லக்ஷ்மிக்கும் சரஸ்வதிக்கும் ஒற்றுமையுண்டா என்ற சந்தேகம் யாருக்காவது இருந்திருக்குமானால் 5உ சென்னை ரேடியோவைக் கவனித்துத் தெளிவு கொண்டிருக்கலாம். அப் பெயர்கள் கொண்ட இரு பெண்மணிகளின் கானம் ஒன்றுக் கொன்று போஷிப்பாய் மனம் கவர்ந்தது. இருவரும் சேர்ந்து உருப்படிகளையும், ஒருவர் ராகங்களையும் பாடினார்கள். கச்சிதமாயிருந்தன. காம்போதி, மாயா மாளவ கௌளை, மோஹனம், ஹிந்தோளம் முதலிய ராகங்கள் இனிய குரலில் அழகாய் வெளிவந்தன.

6உ திருச்சியில் கேட்ட திருவாலங்காடு சுந்தரேசய்யரின் வயலின் கச்சேரி மிகச் சிறந்தது. அவர் சங்கீதம் அதிக காலுக்குக் கொண்டது. சுருதி சுத்தம், கமகப் பொழிவு, வசீகர பாணி; வேறென்ன வேண்டும்? முதல் பாகத்தில் ஸஹானா, தோடி, பரஸ் ராகங்களைப் பொழிந்தார். இரண்டாம் பாகத்தில் பைரவிக்குப் பிறகு கேதார கௌளையை ராகம், தானம் பல்லவிக்கு எடுத்துக் கொண்டு, தன் கை வரிசை முழுவதையும் காட்டினார். உருப்படிகள் விறுவிறுப்பாயிருந்தன. இடைக்கிடை அவர் கற்பனைக்கு இன்றியமையாத பொடி போட்டுக் கொள்வது கூட சுருதியுடன் கலந்து கேட்டதோ என்ற சந்தேகம்.

அன்றைய தினம் மாலை சென்னை ரேடியோவில் நடந்த பி. எம். நடேச பிள்ளையின் திருப்புகழ் தேவாரக் கச்சேரி சற்று புதிதாகவே தென்பட்டிருக்கும். கோவில் சந்நிதியில் பூஜை நைவேத்தியம் ஆனதும் தேவாரம் திருப்புகழ் ஓதுவதாகவே நினைத்து விட்டேன். உருப்படிகளை சந்தக் கட்டு விடாது விளம்பினார். ராக ஆலாபனையையும் கையாளத் தெரியும் என்று காட்டுவதுபோல் 'தந்தை தாய் யார்' என்ற விருத்தத்தை ஹரி காம்போதியில் விளாசினார். அதில் விழுந்த அடுக்குச் சங்கதிகள் அவருக்கே பிரத்யேகம். அவர் பாடிய குதூகலத்தில் தான் பக்தி மேலிட்டு ரேடியோவையே சந்நிதானமாக நினைத்து அலகில் தட்டிக் கொண்டதாகக் கூடப் பக்கத்திலிருந்தோர் சொன்னார்கள்.

7உ நிகழ்ச்சிகளில் திருச்சியில் கே. சாவித்திரி யம்மாளின் கோட்டு வாத்தியம் முக்கியமானது. அவர் வாத்தியத்துடன் இழைந்து பாடும் அழகே அழகு. பந்துவராளி, முகாரி, காம்போதி ராகங்களை வெகு விமரிசையாய்க் கையாண்டார். 'நின்னருள்' என்ற உருப்படியில் நிரவல், ஸ்வரம் கவனிக்கத் தக்கதாயிருந்தன. வீணை, கோட்டு வாத்தியங்களுக்கு மிருதங்கம் பக்க வாத்தியம் ஒன்றே போதுமானது. அன்று வயலின், மிருதங்கம், கடம் எல்லாப் பக்க வாத்தியங்களுமாகச் சேர்ந்து பண்ணிய ஆர்ப்பாட்டத்தில் பல தடவை கோட்டு வாத்திய நாதம் அமிழ்ந்து போய்விட்டது.

9உ என். நாகசுப்ரமணியன் சென்னை ரேடியோவில் பாடுவது முதல் தடவையேயாயினும், உண்மையில் சங்கீதம் பூஷணம் தான் என்பதை நிரூபித்து விட்டார். சாரீரத்தில் போகப் போகப் போதிய காத்திரமும் மெருகும் கண்டது. ஹம்ஸாநந்தி, ஹிந்தோளம், நிலாம் ராகங்கள் அழகிய நாத வடிவங்களாய் விளங்கின. உருட்டல் பிரட்டல்களுடன் அமோகமாக வேலைப்பாடுகளைக் காட்டினார். 'நானே உன்னை நம்பினேன்' என்ற உருப்படியில் 'வாய்ப் பந்தல்' என்ற இடத்தில் அடுக்கு சங்கதிகளால் விமரிசையாய்ப் பந்தல் போட்டார்.

சென்ற வார மிகச் சிறந்த கச்சேரிகளில் அன்று இரவு 8 மணிக்கு நடந்த ஸ்ரீ தண்டபாணி தேசிகரது ஒன்று. ஆரபி, சங்கராபரணம் ராகங்கள் பூரிப்பாயிருந்தன. 'எதுட நிலசிதே'யில் உருட்டல்கள் அசாத்யமாயிருந்தன. வழக்கம்போல் அவரது ராகமாலிகை உருக்கமாயிருந்தது.

10உ சென்னையில் கேட்ட எஸ். வி. பார்த்தசாரதியின் ஒரு மணி நேர முழுக் கச்சேரி சென்ற வார உயர்தர நிகழ்ச்சிகளில் ஒன்றாகும். தங்கு தடையில்லாமல் உதவும் சாரீரம். இளம் வயது. உத்ஸாக மனப்பான்மை. மொத்தத்தில் பாட்டுக் கலகலத்திருந்தது. ஸிம்மேந்திர மத்யமம் பைரவி ராகங்களில் தன் திறமை பூராவும் காட்டினார். பூர்ண சந்திரிகா, கன்னடா ராகங்களும் அழகாயிருந்தன. ஸ்வரம் பாடும் பந்தா விறுவிறுப்பாயிருந்தது. ஆனால் இவர் பாட்டு பெரும்பாலும் இக்காலத்திய மத்யமகால நடையைச் சார்ந்தது. கொஞ்சம் நிதானமாய் அமைத்துக் கொள்ளலாம்.

ஸ்ரீமதி பால ஸரஸ்வதி சென்ற வருஷம் தமிழிசை மகா நாட்டில் நடனம் ஆடாதது ஒரு குறைவாயிருந்தது. இந்த வருஷம் அவருடைய நாட்டியக் கச்சேரி நடக்கிறது.

ஸ்ரீ தண்டபாணி தேசிகரின் கச்சேரி இவ் வருஷம் பெரிய பக்க வாத்தியங்களுடன் நடைபெறுகிறது.

முன்னணிக்கு வரவேண்டிய இளம் பாடகர்கள், பாடகிகள் பலருக்கும் இந்த வருஷத்துத் தமிழிசை விழாவில் இடம் அளிக்கப்பட்டிருக்கிறது.

பக்க வாத்திய வித்வான்களில் ஸ்ரீ சௌடய்யா, ஸ்ரீ ராஜ மாணிக்கம் பிள்ளை, ஸ்ரீ வெங்கடசாமி நாயுடு, பாலக்காட்டு மணி, பழனி சுப்பிரமணியப் பிள்ளை, முருகபூபதி ஆகியவர்கள் தமிழிசை விழாவில் பங்கு எடுத்துக் கொள்கிறார்கள். கஞ்சிரா வாத்தியத்தில் இன்று நிகரற்று விளங்கும் ஸ்ரீ வேணு நாயக்கரும், கடம் வில்வாத்ரி ஐயரும் ஆலங்குடி ராமச்சந்திரனும் சக்கைப் போடு போடுகிறார்கள்.

ஸ்ரீ சுவாமிநாதப் பிள்ளையின் புல்லாங்குழலும், ஸ்ரீ வீருசாமிப் பிள்ளையின் நாதஸ்வரமும் இருக்கின்றன.

எல்லாம் ஒரே அமோகந்தான்!

* * *

இந்தச் சந்தர்ப்பத்தில் தமிழிசைக் கச்சேரிகள் தனியாக நடைபெறுவதின் காரணம் என்ன வென்பதைக் கொஞ்சம் ஞாபகப்படுத்தி வைக்கிறேன். தமிழிசைக் காரர்களுக்குத் தெலுங்கிலோ, சம்ஸ்கிருதத்திலோ, கன்னடத்திலோ, அந்த பாஷைகளிலே உள்ள பாட்டுக்களிலோ துவேஷம் கிடையாது. "வேறு பாஷைப் பாட்டுக்களையே கேட்பதில் எங்கள் இருதயம் திருப்தி யடையவில்லை. தாய் பாஷையாகிய தமிழிலும் பாட்டுக்கள் வேண்டும்" என்று தமிழர்கள் சிலர் கேட்டார்கள். அதற்குப் பதிலாக, "தமிழிலே நல்ல பாட்டுக்களே இல்லை; தமிழிலே பாடினால் சங்கீதமே குட்டிச் சுவர்!" என்று சொல்லி, இந்த அபத்தக் கொள்கையைப் பிரசாரம் செய்யக் கச்சை கட்டிக்கொண்டு கிளம்பினார்கள் சில மகானுபாவர்கள்! அவர்கள் தான் தமிழிசை இயக்கத்துக்கு மூல காரண புருஷர்கள். ராஜா ஸர் அண்ணாமலைச் செட்டியார், ஸ்ரீ டி. கே. சிதம்பரநாத முதலியார் முதலியவர்கள் உப காரணங்கள் தான்.

தமிழ்ப் பாட்டுக்களை வளர்த்து வளப்படுத்துவதற்காகவே ஏற்பட்ட தமிழிசை விழாவில், தமிழ்ப் பாட்டுக்களே பாட வேண்டும் என்று ஏற்படுத்துவது இயற்கை. அவ்வளவுதானே தவிர, வேறு பாஷைகளில் துவேஷம் ஒன்றும் கிடையாது. தியாகய்யர், தீக்ஷிதர் பேரில் தனிப்பட்ட விரோதமும் இல்லை. துவேஷமும் விரோதமும் இல்லை என்பதை நன்கு எடுத்துக் காட்டுவதற்காகவே, வித்வான்கள் இஷ்டப்பட்டால் இடையில் வேறு பாஷைப் பாடல்களும் சில பாடலாம் என்று ஏற்படுத்தியிருக்கிறார்கள்.

தமிழிசைக் கச்சேரிகளின் ஏற்பாடு சென்ற வருஷத்தைவிட இவ்வருஷம் அமோகமாக இருப்பது போல் ரஸிகர் கூட்டமும் இருக்கும் என்று நம்புகிறேன்.

* * *

தமிழிசைக்கு அடுத்தபடியாக நான் குறிப்பிட வேண்டியது, "அநாதைகள் விடுதி"க்காகச் சென்னை நகர சபைக் கமிஷனர் ஸ்ரீ ஷெணய் ஏற்படுத்தியிருக்கும் கச்சேரி வரிசையாகும். இதில் பாடலை விட ஆடல் அதிகமாயிருக்கிறது.

குமாரி ஜயலக்ஷ்மியின் பரத நாட்டியக் கச்சேரியோடு, கோபிநாத் நடனம், நடராஜ்—சகுந்தலா நடனம் ஆகியவைகளும் இருக்கின்றன. அரியக்குடியின் பாட்டும், ஸ்ரீ மகாலிங்கத்தின் புளூட்டும் கூடக் கேட்கலாம். இந்தக் கச்சேரிகள் சென்னை மௌண்ட் ரோட்டில் சமீபத்தில் புதிதாகக் கட்டி முடித்த கருணை விலாச சபை மண்டபத்தில் நடக்கின்றன. இந்தக் கச்சேரிகளுக்குப் பணம் கொடுத்து டிக்கெட் வாங்கிக்கொண்டு போகிறவர்கள், ஒரு மகத்தான தர்மத்துக்குப் பண உதவி செய்யும் புண்ணியத்தையும் அடைந்து, நல்ல ஆடல் பாடல்களைக் கண்டு கேட்டுக் களிக்கும் உரிமையையும் பெறுவார்கள்.



# ஆடல் பாடல்



### கர்நாடகம்

## டிசம்பர் கச்சேரிகள்

"இந்தத் தமிழிசை இயக்கம் ஒன்று எதற்காக ஆரம்பித்தார்கள்? அதை என்னத்திற்காக நாம் ஆதரித்தோம்?" என்று இந்த வாரத்திலேதான் முதன் முதலாக நமக்குத் தோன்றியது. யுத்தம் காரணமாக எத்தனையோ பொருள்களுக்குப் பஞ்சம் வந்திருக்க, பாட்டுக்கும் கூத்துக்கும் மட்டும் பஞ்சமும் இல்லை, ரேஷனும் இல்லை போலிருக்கிறது. தமிழிசைக்காரர்கள் நமது "கல்கி"யில் இரண்டு பக்கம் அடைக்கும்படியான கச்சேரிகளை ஏற்படுத்தி விட்டு, "விளம்பரத்தைப் போடு!" என்றால், இந்தக் காகிதப் பஞ்ச காலத்தில் நாம் என்னதான் செய்கிறது? மற்ற விளம்பரங்களை வேண்டாம் என்று தள்ளுவதுபோல் இதைத் தள்ளுவதற்கில்லை யல்லவா?

வழக்கம்போல் இந்த வருஷமும் சென்னையில் டிசம்பர் சங்கீத விழாக்கள் அமோகமாக நடைபெறுகின்றன. இவற்றுள் ஸெயிண்ட் மேரீஸ் ஹாலில் நடைபெறும் தமிழிசை விழா சென்ற வருஷத்தைக் காட்டிலும் இந்த வருஷம் பிரமாதமான வெற்றியுடன் நடக்குமென்று தோன்றுகிறது. தமிழிசைப் புரோகிராமைப் பார்த்துவிட்டுத்தான் இதைச் சொல்கிறேன்.

தமிழிசை விழாவில், — ஏன், இந்த டிசம்பர் சங்கீத வைபவத்திலேயே — மிகவும் முக்கியமான விசேஷம் என்னவென்றால், காயன கந்தர்வ சங்கீத சம்ராட் ஸ்ரீ செம்பை வைத்திநாத பாகவதர் அவர்கள் தமிழ் இசைக் கச்சேரி செய்வதே யாகும். தமிழ் இசை விழாவில் முதலாவது கச்சேரி செம்பையின் கச்சேரிதான். கர்நாடக சங்கீத உலகில் செம்பை வைத்திநாத பாகவதர் முதன்மை ஸ்தானம் பெற்றது இன்று, நேற்று அல்ல. 1910-ம் ஆண்டிலேயே மலைக்கோட்டை கோவிந்தசாமிப் பிள்ளை, புதுக்கோட்டை தக்ஷிணாமூர்த்திப் பிள்ளை ஆகியவர்களுடைய பக்க வாத்தியங்களுடன் செம்பை பாகவதர் சங்கீதக் கச்சேரி செய்யத் தொடங்கினார். இன்றைக்கு முப்பத்தாறு வருஷம் ஆகப் போகிறது. இன்னமும் அவருடைய வெண்கல நாத சாரீரம் மாசு மறுவின்றிக் கணீரென்று ஒலித்துக் கொண்டுதானிருக்கிறது. இன்றைய தினம் நமது மேடைக் கச்சேரி வித்வான்களில் அதிகமான தொகை வாங்குகிறவர் செம்பைதான். எத்தனையோ வித்வான்கள் வந்தார்கள்; போனார்கள். ஆனால் செம்பை மட்டும் கர்நாடக சங்கீத உலகின் முதன்மை ஸ்தானத்தில் நிலையாக இருந்து வருகிறார்.

"தமிழிலே பாடினால் சங்கீதம் குட்டிச் சுவராகி விடும்; அப்படிப் பாடினாலும் முதலிலே தமிழ் பாடக் கூடாது; கடைசியிலே பாடக் கூடாது" என்பது போன்ற அசட்டுக் கொள்கைகளைக் கையாளாமல் இந்த முதன்மையான சங்கீத வித்வான் தமிழிசை விழாவில் முழுமையும் தமிழ்ப் பாட்டுக்களாகவே கச்சேரி செய்ய முன்வந்ததை நான் பெரிதும் பாராட்டுகிறேன். தமிழ் மக்களும் பாராட்டுவார்கள் என்பதில் சந்தேகமில்லை.

செம்பையின் சங்கீதம் பரம்பரையாக வந்த உயர்ந்த சங்கீத பாணியைச் சேர்ந்தது. ஆனால் அவர் தமிழ் உச்சரிக்கும் பாணி மட்டும் கொஞ்சம் மலையாள பாணியாய்த்தானிருக்கும். இதை எதிர்பார்த்தே அவருடைய கச்சேரி கேட்கப் போகவேண்டும்.

இன்னும், இன்று சங்கீத ரசிகர்களின் ஆதரவைப் பெரிதும் பெற்றிருக்கும் ஸ்ரீ ஜி. என். பாலசுப்பிரமணியம், மதுரை மணி ஐயர் ஆகியவர்களின் கச்சேரிகள் உயர்ந்த பக்க வாத்தியங்களுடன் நடக்கின்றன. தமிழிசை விழாவில் எம். எஸ். கச்சேரி உண்டு என்று சொல்ல வேண்டியதில்லை.

தமிழ்ப் பாட்டுக்களுக்கு அபிநயம் பிடித்துப் பரத நாட்டியத்துக்குப் புத்துயிர் தந்த

விடோம்!" என்று அபயப் பிரதானம் கொடுக்கிறார். கிரிப்ஸ் திட்டப்படி, "இஷ்டப்பட்டால் பிரிந்து தொலைந்து போங்கள்!" என்று சொல்லக்கூட பர்மா விஷயத்தில் அவர் தயாராயில்லை. "பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்துக்குள்ளேயே பர்மாவையும் வைத்து என்றென்றைக்கும் ஆதரிக்கத்தான் போகிறோம்" என்கிறார்.

இன்னும் சில இங்கிலீஷ்காரர்களும் பிரிட்டிஷ் பத்திரிகைகளும் பர்மா விஷயத்தில் கூறும் கருணை மொழிகள் நம்முடைய கண்களில் கண்ணீரைக் கொண்டுவந்து விடுகின்றன.

"இனிமேல் நாம் பர்மாவின் செல்வத்தைச் சுரண்டுவதாயிருந்தால், பர்மியர்களுடைய பூரண சம்மதத்துடனே தான் சுரண்ட வேண்டும்!" என்கிறார் ஒரு கருணை வள்ளல்.

"பர்மாவை ஜப்பானுடைய அரசியல் ஆதிக்கத்திலிருந்து விடுவிப்பது மட்டும் போதாது; இந்தியர்களின் பொருளாதார ஆதிக்கத்திலிருந்தும் விடுதலை செய்ய வேண்டும்!" என்கிறார் ஒரு பரோபகார சீலர்.

ஆகக்கூடி, மொத்தத்தில், இந்தியத் துருப்புக்களைக் கொண்டும் இந்தியாவின் வசதிகளைக் கொண்டும் பர்மாவை மறுபடியும் ஜயித்து விட்டு, பர்மாவில் சொத்து சுதந்திரம் வைத்துக்கொண்டிருந்த இந்தியர்களுக்கெல்லாம் பட்டை நாமத்தைப் போட்டு விடுவதற்குத் தீவிரமான யோசனைகள் நடப்பதாகத் தெரிகிறது.

இப்படியெல்லாம் பிரிட்டனுக்கு எவ்வளவோ ஆயிரம் மைல்களுக்கு அப்பாலுள்ள பர்மாவின் விஷயத்தில் பிரிட்டிஷார் கவலை செலுத்தவும், தியாகம் செய்யவும், பர்மியர்களைக் காப்பாற்றி அமைதியுடனும் சந்தோஷத்துடனும் வாழும்படி செய்யவும், அவர்களுடைய செல்வத்தை அவர்களுடைய சம்மதத்துடனேயே சுரண்டவும் தயாராயிருக்கும்போது, சமீபத்திலுள்ள கிரீஸ் தேசத்தின் விஷயத்தில் அதில் பத்தில் ஒரு பங்கு கவலையாவது எடுத்துக் கொள்ள வேண்டாமா? நல்ல வேளை பார்த்துச் சர்ச்சில் அந்தக் காரியத்தைச் செய்ய ஆரம்பிக்கும்போது என்னத்திற்காக அவர் மேல் நாய் மாதிரி விழுந்து, நரி மாதிரி பிடுங்குகிறார்கள்?

"நான் அடிக்கிறாப் போல் அடிக்கிறேன்; நீ அழுகிறாப் போல் அழு!" என்று விருந்தாளியை ஏமாற்றி அனுப்புவதற்காகச் சதிபதிகள் சதியாலோசனை செய்தார்களே, அந்த முறையில் அமெரிக்கர்களின் கண்ணில் மண்ணைத் தூவுவதற்காக பிரிட்டிஷ் தொழிற் கட்சி அங்கத்தினர் சர்ச்சிலைக் கண்டிக்கிறதாயிருக்கும் பட்சத்தில் நமக்கு ஆட்சேபணையில்லை. அவ்விதமின்றி உண்மையாகவே அவர்கள் சர்ச்சிலைக் கண்டிப்பதாயிருக்கும் பட்சத்தில், அவர்களை நாம் பலமாகக் கண்டிக்கிறோம். ஏது? ஏது? இன்றைக்குக் கிரீஸ் தேசத்தைப் பற்றி இப்படிச் சொல்கிறார்கள்; நாளைக்கு இந்தியா விஷயத்திலும் 'ஹிந்துக்களும் முஸ்லிம்களும் எப்படியாவது அடித்துக் கொண்டு சாகட்டும்!' என்று கையை விரிப்பதாயிருந்தால், நாம் என்னத்தைச் செய்வது?

நல்ல வேளை; சர்ச்சில் துரை இந்த மாதிரி அபத்தப் பேச்சுக்கெல்லாம் செவி கொடாத அஸகாய சூராயிருக்கிறாரோ, இந்தியா பர்மா முதலிய கீழ் நாடுகள் எல்லாம் பிழைத்திருக்கின்றனவோ!

"நாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" என்ற பரோபகார சிந்தையுடன், இந்தியாவுக்கு நூற்றைம்பது வருஷமாகச் செய்து வரும் ஒத்தாசையைக் கிரீஸுக்கும் கட்டாயம் செய்யும்படி சர்ச்சிலை நாம் கேட்டுக் கொள்கிறோம்.

கிரீஸுக்கு உதவி செய்வதோடு நில்லாமல் பல்கேரியா, யுகோஸ்லாவியா, பெல்ஜியம், ஹாலந்து, நார்வே, ஸ்வீடன், இதாலி, ஹங்கரி முதலிய தேசங்களுக்கும் அதேவித உதவியைச் செய்யக் கோருகிறோம்.



கிரீஸ் விஷயத்தில் சர்ச்சில் துரையின் பிடிவாதத்தை ரொம்ப ரொம்பப் பாராட்டுகிறோம்.

நம்முடைய அபார பாராட்டுதலுக்கு அறிகுறியாக இதோ ஒரு முழு ரொட்டித் துண்டை மகா கனம் பொருந்திய சர்ச்சில் துரைக்குப் போடுகிறோம்!

---

ஐந்து ரூபாய் பரிசு: சென்ற இதழில் வெளியான "நல்ல யோசனை!" என்னும் காலக்ஷேபத் துணுக்குக்குப் பரிசு பெற்றவர்: ஸ்ரீ அபிராமபாரதி, திருக்கடையூர்.

முதலில் கிரேக்க நாட்டை நாகரிகப் படுத்த ஆரம்பிக்கலாமென்று பார்த்தார். அதற்காகத்தான் உலக மெல்லாம் அவர் மேல் சீறி விழுகிறது. பிரிட்டிஷ் தொழிற் கட்சிக்காரர்கூட மகாநாடு கூடி சர்ச்சில் ஏதோ செய்யத் தகாத காரியத்தைச் செய்து விட்டதுபோல் வாய் கிழியப் பேசிவிட்டு, ஒரு மிதமான கண்டனத் தீர்மானத்தையும் நிறைவேற்றி வைத்திருக்கிறார்கள்!

அப்படிச் சர்ச்சில் என்ன பிரமாதமான பாதகத்தைச் செய்து விட்டார், நீங்கள்தான் சொல்லுங்கள்.

பிரிட்டிஷ் துருப்புக்கள் முப்பதினாயிரம் பேர் உயிரை விட்டுக் கிரீஸ் தேசத்தை ஜெர்மன் பிடியிலிருந்து காப்பாற்றினார்கள். அப்படிக் காப்பாற்றிய தேசத்தில் அமைதி நிலவும்படி செய்ய முயல்வது பாதகமா? அது ஒரு குற்றமா?

அப்படியானால், பிரிட்டிஷார் சென்ற நூற்றைம்பது, இருநூறு வருஷமாக உலகத்தின் பல பாகங்களிலும் செய்துள்ள காரியங்கள் எல்லாம் குற்றம், பாதகம் என்றல்லவா ஏற்பட்டுவிடும்?

இந்தியாவிலே பிரிட்டிஷார் காலடி வைத்தது முதல் என்ன செய்து வந்தார்கள்? இங்கே ராஜாக்களும் நவாபுகளும் பேஷ்வாக்களும் பாதுஷாக்களும் ஒருவருக்கொருவர் சண்டை போட்டுக் கொண்டிருப்பதைக் கண்டு சகிக்காமல், தேசத்தில் அமைதியை நிலை நாட்ட விரும்பினார்கள். கேவலம் வியாபாரத்துக்காக வந்த பிரிட்டிஷார், இந்தியாவில் 'தடியெடுத்தவன் தண்டல்காரன்' என்ற நிலைமை குடிகொண்டிருந்ததைக் கண்டு சகியாமல், நல்ல அரசாங்கத்தை ஏற்படுத்த விரும்பினார்கள். இந்தப் புனிதமான நோக்கங்களை நிறைவேற்றுவதற்காக பிரிட்டிஷார் தங்களுடைய இரத்தத்தையும் சிந்தினார்கள்; இந்தியர்களுடைய இரத்தத்தையும் சிந்தினார்கள். இவ்வளவு கஷ்டப்பட்டு இரத்தம் சிந்தி ஏற்படுத்திய அமைதியையும் நல்லரசாட்சியையும் மற்றவர்கள் வந்து குலைத்துவிட இடங் கொடுக்க முடியுமா? எனவே, அமைதியைக் காப்பதற்கும் நல்லரசாட்சியை நடத்துவதற்கும் இங்கேயே ஸ்திரமாக உட்கார்ந்தார்கள்!

இவ்வளவு நல்ல காரியத்தை, உத்தமமான பணியை, பக்கத்திலுள்ள ஐரோப்பாவுக்கும் கொஞ்சம் செய்யலாமென்று சர்ச்சில் ஆரம்பிப்பதற்குள், எதற்காக இப்படிக் கூச்சலிட வேண்டும்? ஏதோ கொள்ளை போய் விட்டது போல், 'லபோ லபோ' என்று ஏன் அடித்துக்கொள்ள வேண்டும்?

இந்தியாவும் பர்மாவும் மலாய் நாடும் கொடுத்து வைத்தது கிரீஸ் கொடுத்து வைக்கவில்லையா?

முப்பதினாயிரம் ஆங்கில வீரர் உயிரைக் கொடுத்து, எத்தனையோ கோடி கோடியான பொருட் செலவு செய்து, கிரீஸை ஜெர்மன் பிடியிலிருந்து விடுவித்த பின், அங்கே அமைதியையும் நல்லரசாட்சியையும் நிலை நாட்ட வேண்டாமா? உள்நாட்டுச் சண்டைக்கு இடங் கொடுக்கலாமா? ஜெர்மனியிடமிருந்து விடுதலை அடைந்த நாடுகளிலே யெல்லாம் அமைதி நிலை நாட்டும் பொறுப்பை ருஷியாவுக்கே ஏகபோக உரிமையாகக் கொடுத்து விடுவதா?

பிரிட்டிஷ் தொழிற் கட்சி அங்கத்தினர்களை நாம் ஒன்று கேட்கிறோம். அவர்களுக்கு ஏன் இந்தப் பட்சபாதம்? பிரிட்டிஷார் செய்யும் உதவி, ஒத்தாசை, கைங்கரியம், திருப்பணி எல்லாவற்றையும் ஏன் கீழ் நாடுகளுக்கே வைத்துக் கொள்ள வேண்டும்?

உதாரணமாக, பர்மா விஷயத்தில் பிரிட்டிஷார் இவ்வளவு விசேஷ அக்கறை எடுத்துக் கொள்ள என்ன அவசியம்? பாருங்கள்! ஜப்பானியர் படை எடுத்து வந்தபோது பர்மியர் எவ்வளவு கேவலமாக நடந்துகொண்டார்கள்? பிரிட்டிஷார் தங்களுக்குச் செய்த நன்மைகளையும், தங்களை நாகரிகப் படுத்தியதையும் அடியோடு மறந்து விட்டு, ஜப்பானுடைய ஆட்சி சாசுவதம் என்று அமைதியாக இருந்து விட்டார்களல்லவா? கிரேக்கர்களைப் போல் மலைகளிலும் காடுகளிலும் ஒளிந்திருந்து படை திரட்டி ஜப்பானியருடன் போரிட்டார்களா?

அப்படிப்பட்ட நன்றியில்லாத ஜனங்களைக்கூட பிரிட்டிஷார் அடியோடு கைவிட விரும்பவில்லை யென்பது சமீபத்தில் நடந்த காமன்ஸ் சபை விவாதத்திலிருந்தும், பத்திரிகைகளில் நடக்கும் சர்ச்சைகளிலிருந்தும் நன்கு தெரிய வருகிறது.

நம்மைப் போன்றவர்களாயிருந்தால், "பர்மாவும் பர்மியர்களும் எக்கேடு கெட்டாவது போகட்டும்!" என்று விட்டுத் தள்ளி விடுவோம். ஆனால் பொறுமையே அவதாரமான அமெரி துரை என்ன சொல்கிறார்? "கைவிடோம்! பர்மாவைக் கை

# பாராட்டுகிறோம்!

**யா**ரைப் பாராட்டுகிறோம் என்று சொல்லவும் வேண்டுமா? கேவலம் அற்ப சொற்பமானவர்களை யெல்லாம் அப்படி நாம் பாராட்டி விடுவோமா?

மகத்தான பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் மகோந்நத பிரதம மந்திரி வின்ஸ்டன் சர்ச்சிலைத்தான் பாராட்டுகிறோம்!

சர்ச்சிலை யார் வேண்டுமானாலும் தூற்றட்டும்; யார் வேண்டுமானாலும் திட்டட்டும்; அமெரிக்கர்கள் உரத்த குரலில் அவர் மேல் குற்றம் கூறட்டும்; ருஷியர்கள் மௌனம் சாதித்து அவரை அவமதிக்கட்டும்; பிரிட்டிஷ் தொழிற் கட்சி அங்கத்தினர்களே அவரைக் குறை கூறிக் கண்டித்துச் சின்ன பின்னம் செய்யட்டும்.

நமக்கு அக்கரை இல்லை. உலகமெல்லாம் சர்ச்சிலைக் கண்டித்த போதிலும் நம்முடைய பூரண பாராட்டுதலும் அந்தப் பிடிவாதக்காரருக்குத்தான் என்பதில் சந்தேகமில்லை.

பிரதம மந்திரி சர்ச்சிலைப் பற்றி நம்முடைய மனோபாவம் ஏற்கெனவே கொஞ்சம் முன் பின்னாக இருந்தாலும், இப்போது அடியோடு மாறி விட்டது. சென்ற இரண்டு வாரமாக ஐரோப்பாவில் — கிரீஸில் — நடந்து வரும் சம்பவங்கள்தான் அவர் மேல் நமக்கு அத்தகைய நன் மதிப்பையும் விசுவாசத்தையும் உண்டு பண்ணி யிருக்கின்றன.

அடடே! கிரீஸில் சர்ச்சில் என்ன செய்கிறார் என்று தெரிகிறதா? உலகத்தின் க்ஷேமத்துக்காக நாம் கூறிய ஒரு அருமையான யோசனையை யல்லவா நிறைவேற்றி வைக்கப் பார்க்கிறார்?

நமது அபூர்வ யோசனையைக் "கல்கி"யின் முதலே முதல் இதழிலேயே விவரமாகக் கூறி யிருந்தோம். அதை இப்போது சுருக்கமாக ஞாபகப் படுத்த விரும்புகிறோம்:—

உலகத்தில் சென்ற நூற்றைம்பது வருஷங்களுக்குள் நடந்திருக்கும் கோர பயங்கர யுத்தங்கள் எல்லாம் ஐரோப்பா கண்டத்திலுள்ள நாடுகள் ஒற்றுமை யின்றி ஒன்றைக் கொன்று சண்டை இட்டுக் கொள்வதிலிருந்தே ஆரம்பமாகி யிருக்கின்றன. ஐரோப்பாவில் பல பாஷைகளும், பல ஜாதிகளும், பல இராஜ்யங்களும் இருந்து வருவது உலகத்துக்கே விநாசம் நேரக் காரணமா யிருந்து வருகிறது. இதை நிவர்த்திக்க ஒரே ஒரு வழிதான் உண்டு. அதாவது பிரிட்டிஷார் இந்தியாவுக்குச் செய்திருக்கும் நன்மையை ஐரோப்பாவுக்கும் செய்ய வேண்டும். அதாவது ஐரோப்பா கண்டத்தை முழுதும் கைப்பற்றி, ஒரே இராஜ்யமாக்கி, இங்கிலீஷ் பாஷையையே இராஜாங்க பாஷையாக்கி, ஆங்காங்கு பிரிட்டிஷ் கவர்னர்களையும், பிரிட்டிஷ் கலெக்டர்களையும் நியமித்து, நீதி நவறாத செங்கோல் செலுத்தி, இவ்விதம் குறைந்தபட்சம் நூறு வருஷம் ஐரோப்பாவில் பிரிட்டிஷ் ஆட்சி நிலவச் செய்து, ஐரோப்பியர்களைக் காட்டுமிராண்டித் தனத்திலிருந்து கரையேற்றி நாகரிகப்படுத்த வேண்டும்.

இந்தியாவிலே நூற்றைம்பது வருஷத்துக்கு மேல் பிரிட்டிஷார் இந்தக் காரியத்தைச் செய்து விட்டபடியால், இனிமேல் இந்தியர்கள் பிழைத்துப் போகட்டும் என்று விட்டு விட்டு, இதே கைங்கரியத்தைத் தங்கள் அருகிலுள்ள ஐரோப்பாவுக்குச் செய்யப் பார்க்கலாம்.

மேற்கண்ட விதம் நாம் யோசனை கூறியபோது, அதை யாராவது கவனிக்கப் போகிறார்கள் என்ற நம்பிக்கை நமக்கு இருக்கவில்லை. "ஏழை சொல் அம்பலம் ஏறுமா? செவிடன் காதிலே சங்கூதின கதையாகத்தான் முடியப் போகிறது!" என்றுதான் பயந்து கொண்டிருந்தோம்.

**ஆ**னால், என்ன அதிசயத்தைச் சொல்ல? நம்முடைய அபூர்வ யோசனை சர்ச்சிலின் திருச் செவிக்கு எப்படித்தான் போய்ச் சேர்ந்ததோ என்னமோ, அல்லது அவருடைய அபார மூளையில்தான் ஒருவேளை அதுதானாகவே தோன்றி விட்டதோ என்னமோ, மனுஷர் அதை நிறைவேற்றி வைப்பதற்கு ஒரு சந்தர்ப்பம் கிடைத்ததும் அங்குரார்ப்பணம் செய்தார். கிரீஸ் தேசம் பிரிட்டனோடு வெகு காலமாக சிநேக பாந்தவ்யம் உள்ள நாடாயிற்றே, இந்த யுத்தத்திலும் கிரேக்கர் நம் பக்கத்தில் பிடிவாதமாய் நின்றிருக்கிறார்கள், மேலும் மத்திய தரைக் கடலில் கிரீஸ் ஒரு முக்கிய ஸ்தானம் வகிக்கிறதே, மத்திய தரைக் கடல் இந்தியாவுக்குப் போகும் வழியில் இருக்கிறதே, — என்றெல்லாம் தீர்க்காலோசனை செய்து, ஐரோப்பாவில் முதன்

-ஒ ர்ரன்

ஐயைய! ஆளைப் பாருடா, ஆளை!

ஜான்புல்

சமஸ்தான மன்னர்கள்.

இந்தியன்

முன்பு பிரிட்டிஷாருடன் கூடிக்குலாவிக் கொண்டிருந்த சமஸ்தான மன்னர்கள்.....

ஐயையோ! என்னைக் கவனிப்பார் யாரும் இல்லையே!

உனக்கு நன்றாக வேண்டும்.

.....இப்பொழுது அவர்களுடன் சோபித்துக் கொண்டு இருக்கிறார்கள். மன்னர்களின் இந் நிலையைக் கண்டு யாரும் இரக்கப் பட்டதாகத் தெரியவில்லை.

# நிகழ்ச்சிச் சித்திரம்

வைஸ்ராய் மாளிகை

எல்லாரும்
உள்ளேவந்து
என்னுடன்
நீண்டநேரம்
சம்பாஷணை
நடத்தலாம்
— வேவல்

வைஸ்ராய்
பிரபுவை
யாரும்
தொந்தரவு
செய்யக்கூடாது
— உத்தரவு

ஸ்ரீ புலாபாய்தேசாய், ஸ்ரீ சவர்க்கார், ஜனாப் ஜின்னா, இந்த மூன்று தலைவர்களுக்கும் வைஸ்ராய் வேவல் பேட்டி அளித்தார். ஆனால் அரசியல் விஷயமாக ஒன்றும் பேசவில்லை.



# கல்கி

மலர் 4 } தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் { இதழ் 20

# என்ன சேதி?

## பாரதியார் நிதி

இந்த வாரத்தில் பாரதியாரின் ஞாபகச் சின்ன நிதி பத்தாயிரம் ரூபாய் எல்லையைக் கடந்து பன்னீராயிரம் ரூபாய்க்கு மேல் போய்விட்டது. இதற்காக யாரை வாழ்த்துவது என்று சிந்தித்தபோது எட்டயபுரம் பாரதி இலக்கிய மன்றத்து இளைஞர்கள் கவனத்துக்கு வந்தார்கள். அவ் விளைஞர்களின் பக்தி சிரத்தையும் ஆர்வமும் ஊக்கமுந்தான் இப்படி இலங்கையிலிருந்து இமயமலை வரை உள்ள தமிழர்களிடையே ஒரு ஆவேசத்தையே உண்டு பண்ணியிருக்கிறது என்று கருதுகிறோம். பாரதியார் பிறந்த ஊரில் அவருக்கு ஒரு மகத்தான ஞாபகச் சின்னத்தை அமைத்துவிட 'வேண்டுமென்று அந்த இளைஞர்கள் கண்ட கனவுதான் இவ்விதம் கண்டியிலிருந்து லாகூர் வரையிலுள்ள தமிழர்களைப் பணத்தைப் பொழியச் செய்கிறது.

இந்த இதழில் பாரதியார் நிதிக்குக் கொடுக்க வேண்டிய பக்கங்களைத் தமிழிசை இயக்கம் அபகரித்துக் கொண்டு விட்டது. எனவே, இந்த வாரத்து வசூல் ஜாபிதாவை இந்த இதழில் வெளியிடக் கூடவில்லை. அடுத்த இதழில் சேர்த்து வெளியிடப்படும்.

## 'சமிதி' ஸ்தாபனம்

அன்னை கஸ்தூரிபா புண்ணியம் செய்தவர்தான். அவர் பெயரால் வசூலித்த நிதியின் பயனாக உலகிலேயே மிகப் பெரிய சமூக ஊழியர் ஸ்தாபனம் மகாத்மா காந்தியின் தலைமையில் நிறுவப்பட்டிருக்கிறது. இந்தப் புது ஸ்தாபனத்திற்கு 'சமிதி' என்று பெயராம். ஏற்கெனவே நிர்மாண வேலைத் திட்டங்களை நடத்திவரும் தாலிமிசங்கம், சர்க்கா சங்கம், ஹரிஜன சேவா சங்கம் ஆகிய ஸ்தாபனங்களிலிருந்து இந்தப் புது ஸ்தாபனத்திற்குப் பிரதிநிதிகள் அனுப்புவார்களாம்.

இந்தப் புதுஸ்தாபனத்தின் மூலம் லட்சம் ஊழியர்களுக்குப் பயிற்சி அளித்து இந்தியாவிலுள்ள ஏழு லட்சம் கிராமங்களிலும் சேவை செய்ய ஏற்பாடு செய்யப்படுமாம். இந்த 'சமிதி' சங்கம் நல்ல முறையில் அமைக்கப்பட்டு வேலை செய்யத் தொடங்கி, நாட்டில் உள்ள வறுமைப்பிணிக்கும், மற்ற சமூக ஊழல்களுக்கும் சீக்கிரத்தில் சமாதி கட்டும் என்று நம்புகிறோம்.

## சந்திரமண்டலம் ஜாக்கிரதை!

சமீபத்தில் நாஜிகளின் வி. 2. குண்டைப் பற்றி விஞ்ஞானிகள் சில விவரங்கள் கூறியிருக்கின்றனர். இந்த குண்டுகள் கீழே விழு முன்னர் ஆகாசத்தில் 70 அல்லது 80 மைல் உயரத்துக்குப் போகின்றனவாம். இதைப் போல் இன்னும் ஏழு மடங்கு உயரம் போனால் சந்திரமண்டலத்தையே தொட்டு விடலாம் என்றும் கணக்குப் போட்டுக் கூறுகின்றனர்.

ஹிட்லருக்கு நாம் ஒரு யோசனை கூற விரும்புகிறோம். பேசாமல் இந்தப் பூமண்டலத்தைப் பிடிக்கும் ஆசையைக் கை விட்டுவிட்டு, சந்திர மண்டலத்தின் மீது பாயும்படி கேட்டுக் கொள்கிறோம். இந்தப் பூலோகத்தில் அவர் என்னதான் புதுப் புது ஆயுதங்களைக் கண்டு பிடித்து எவ்வளவுதான் கரடியாய்க் கத்தி சாகஸம் செய்து நாடுகளைப் பிடித்துக் கொண்டு வந்த போதிலும் அவையெல்லாம் சாசுவதமின்றிப் போய்விடுகின்றன. பொல்லாத ருஷ்யர்கள் நாஜி சேனைகளை அவர்கள் ஊருக்கே விரட்டியடித்து அவர்கள் பிடித்த நாடுகளனைத்தையும் திருப்பிப் பிடித்துக் கொண்டு வருகின்றனர். எனவே இப்படிப் பயனற்ற காரியத்தைச் செய்வதைக் காட்டிலும் சந்திரமண்டலத்தை ஏன் ஒரு கை பார்க்கக் கூடாது?

1944-ம் வருஷம் ஏப்ரல் மாதம் 1-ம் தேதிமுதல்

ஜூலை மாதம் 1-ம் தேதிக்குள்

# 3% விக்டரி லோனில்

**15½ கோடி ரூபாய்** போடப்பட்டிருக்கிறது

மூன்று மாதங்களில் இந்திய மக்கள் இந்தப் பத்திரத்தில் 15½ கோடி ரூபாய் போட்டிருக்கிறார்களென்றால், இதுதான் கிடைக்கக்கூடிய முதலீடுகளிலெல்லாம் மிகச் சிறந்தது என்று தெளிவாகத் தெரிகிறது. தாமதியாதீர்கள்! உங்கள் சேமிப்புகளை 1957ம் வருஷத்திய 100க்கு 3 வட்டி விக்டரி லோன் பத்திரங்களில் போட்டு வையுங்கள்.

உங்களுக்கு உத்தரவாதம் அளிக்கிறது

1. அசலில் தொகைக்கு ஆபத்தில்லை. இந்தக் கடன் பத்திரங்கள் வாங்கும்பொருட்டு நீங்கள் போடும் தொகை 1957-ம் வருஷம் செப்டம்பர் மாதம் 1-ம் தேதி அஸலாகத் திருப்பிக் கொடுக்கப்படும். இந்நாட்டுச் செல்வம் இதற்கு ஆதாரமாயிருக்கிறது. அதன் மதிப்பு ஒருபோதும் குறையாது.

2. மனக்கவலை கிடையாது. உங்கள் முதலுக்கு வட்டி கிடைக்குமோ கிடைக்காதோ வென்னும் மனக்கவலை கிடையாது. வருஷத்திற்கு 100க்கு 3 வீதம் கணக்கிட்டு, அரை வருஷத்திற் கொருதரம் வட்டி கொடுக்கப்படும். உங்கள் கட்டளைப்படி வித்ராசகார வாரண்டுகள் தாமாகவே அனுப்பப்படும்.

3. பணம்போடத் தடையில்லை. மறு அறிக்கைவரை எவ்வளவு தொகை வேண்டுமானாலும் போடத் தடையில்லை.

4. ரொக்கமாக்கவும் தடையில்லை: கடன் தொகை திருப்பிக்கொடுக்கப்படுமுன், உங்களுக்கு ரொக்கம் தேவையாயிருந்தால் எந்தச் சமயத்திலும் வேண்டுமானாலும் இந்தக் கடன் பத்திரம் விற்பனையாகும்.

**இந்த லோன் சம்பந்தமான சில உண்மைகள்**

1. அசல் தொகைக்கே கடன் பத்திரங்கள் விற்கப்பட்டு 1957-ம் வருஷம் செப்டம்பர் 1-ம் தேதி தொகை திருப்பிக் கொடுக்கப்படும்.
2. மறு அறிக்கைவரை கடன் பத்திரங்கள் விற்கப்படும்.
3. அரை வருஷத்திற்கு ஒருமுறை மார்ச் மாதம் 1-ம் தேதியும் செப்டம்பர் மாதம் 1-ம் தேதியும் வட்டி கொடுக்கப்படும்.
4. வாங்குவது எளிது, உங்கள் பாங்கர்களுக்காவது, பம்பாய், கல்கத்தா, சென்னை, டில்லி, கான்பூர் ஆகிய ஊர்களிலுள்ள இந்திய ரிசர்வ் பாங்கிகளுக்காவது மற்ற ஊர்களிலுள்ள இந்திய இம்பீரியல் பாங்கி கிளைகளுக்காவது அரசாங்க கஜானாக்களுக்காவது மனுச்செய்துகொள்ளுங்கள்.

## செலவைச்சுருக்கி சேமிப்பைப்பெருக்கி

**1957-ம் வருஷத்திய 3% வட்டி**

# விக்டரி லோன்

பத்திரத்தில் உங்கள் பணத்தைப் போட்டுவையுங்கள்

இந்திய அரசாங்க நிதி இலாகா வெளியீட்டது.



# கல்கி பொருளடக்கம்



மலர் 4 } இதழ் 20 }    **1944 டிசம்பர் 17**    { தாரண ௵ { மார்கழி 3



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்களும், சம்பவங்களும் கற்பனையே.








கர்நாடக சங்கீதத்துக்குத் தாயகமும் உறைவிடமுமான தமிழ் நாட்டில் அயல் மாகாணத்திலிருந்து ஒரு சங்கீத வித்வான் வந்து நல்ல பெயரும் புகழும் பெறுவதென்பது எளிய காரியமல்ல. அவ்வாறு புகழும் பெயரும் நம் காலத்தில் பெற்றவர்களில் மைசூர் சமஸ்தான வித்வான் சங்கீதரத்ன ஸ்ரீ டி. சௌடய்யா பிரதானமானவர். அபார வித்வத்தோடு, சர்வஜன ரஞ்சகமாகவும் அழுத்தமாகவும் கம்பீர நாதத்துடனும் வயலின் வாத்தியத்தைக் கையாண்டு கச்சேரியை அமோகமாகச் சிறப்பிக்கும் ஆற்றல் அவரிடம் உண்டு.

ஸ்ரீ சௌடய்யா தமது வயலினில் ஏழு தந்தி போட்டு வாசிக்க ஆரம்பித்தபோது, பழமைப் பற்றுள்ள சங்கீத பண்டிதர்கள் எல்லாரும் பயங்கரத்தை யடைந்தார்கள். அதுகாரணமாக மியூஸிக் அகாடமிக்காரர்கள் ஸ்ரீ சௌடய்யாவைச் சில வருஷங்கள் அகாடமிக்கு அழைக்காமலே இருந்தார்கள். அதனால் நஷ்டம் ஸ்ரீ சௌடய்யாவுக்கு இல்லையென்று தெரிந்ததும் திரும்பவும் அவரை வருந்தி அழைக்கத் தொடங்கினார்கள்.

ஸ்ரீ சௌடய்யாவைப் பக்க வாத்தியமாகப் பெற விரும்பாத பிரபல வித்வான் தமிழ் நாட்டில் யாரும் இல்லையென்றாலும் ஸ்ரீ செம்பை வைத்தியநாதய்யரின் கச்சேரிக்கு வாசிக்கும்போது தான் அவருடைய வாத்தியம் பூரண சோபை பெறுகிறது. பாட்டுக்கும் பக்க வாத்தியத்துக்கும் அவ்வளவு உற்சாகமான ஒத்துழைப்பை மற்றக் கச்சேரிகளில் காணமுடியாது.

இந்த வருஷம் டிசம்பர் 24உ தமிழிசை மகாநாட்டில் செம்பையின் பாட்டுக்குச் சௌடய்யா பக்க வாத்தியம் வாசிக்கிறார் என்பதை நேயர்களுக்கு ஞாபகப் படுத்துகிறோம்.




# அவன் ஊக்கங் குறையாமல் இருக்கச் செய்வது உங்கள் வேலை!



தாய்மார்களே: உங்கள் குடும்பத்திற்கு ஒவ்வொரு தடவை சமையல் செய்யும்பொழுதும் உங்களால் எவ்வளவு செய்யலா மென்பதை உணர்கிறீர்களா? உங்கள் சமையல் திட்டங்களி லும், அவைகளைத் தயாரிக்கும் முறையிலுமே உங்கள் குழந் தைகள் ஆரோக்கியமான ஊக்கத்தைப் பெறுவதோ, அல்லது ஒன்றுக்கும் உபயோகமில்லாமல் ஊக்கமற்றவர்களாக ஆவதோ இருக்கிறது. இது சமைப்பதை மேலும் உற்சாகமுள்ள தாகவும், முக்கியமானதாகவும் செய்கிறதல்லவா? உணவுகள் ஊக்கமளிக்கும் தரத்தில் வேற்றுமையுள்ளவை. அதிக ஊக்க மளிப்பவை சில. வெறும் ருசியும், திருப்தியுமளிக்கக் கூடியவை சில. அதிக உணவு உண்டும் அநேகர் ஊக்கமற்றுக் காணப் படுவது இதனால்தான். ஆனால் எல்லா உணவுகளையும் அதிக ஊக்கமுள்ளதாகச் செய்துவிடலாம். அவைகளை வைடமின் நிரம்பிய டால்டாவைக் கொண்டு தயார் செய்வது இதற்கு உதவியாக இருக்கும். டால்டா இயற்கையின் முக்கியமான "உணவு சத்துக்களை" அளிக்கிறது—இந்த சத்துக்கள் நாம் சாதாரணமாக சாப்பிடும் உணவுகளில் மிகக் குறைவு.




வைடமின் நிறைந்த **டால்டா** ஊக்கமளிக்கிறது.

THE HINDUSTAN VANASPATI MANUFACTURING CO. LTD.

# தமிழிசை விழா, சென்னை 1944-45.

திறப்பாளர்: ஸர். பி. டி. ராஜன் அவர்கள் பார் - அட் - லா

## செயின்ட் மேரீஸ் ஹால், அரமனைக்காரத் தெரு, ஜி. டி.

---

### திறப்பு விழா

| | | |
|---|---|---|
| 23-12-1944 மாலை 4-30 மணிக்கு | டி. அமிர்தவல்லி, கமலா (தமிழிசைக்கல்லூரி மாணவர்கள்) | —பாட்டு |
| | மகாதேவன் | —பிடில் |
| | சென்னை கோபால் முதலியார் | —மிருதங்கம் |
| மாலை 6 மணிக்கு | சொற்பொழிவு. | |
| மாலை 7 மணிக்கு | திருமதி கௌசல்யா ராமகிருஷ்ண ரெட்டி | —வீணையும் பாட்டும் |
| | சென்னை வேணு நாயக்கர் | —மிருதங்கம் |
| 24-12-1944 மாலை 4 மணிக்கு | சென்னை பி. வேதாசலம் செட்டியார் | —பாட்டு |
| | டி. சுப்பராயலு | —பிடில் |
| | சிதம்பரம் சி. வி. நடராஜ ஐயர் | —மிருதங்கம் |
| | சென்னை கோபால் முதலியார் | —கஞ்சிரா |
| | பாலக்காடு வில்வாத்திரி ஐயர் | —கடம் |
| மாலை 6 மணிக்கு | காயன கந்தர்வ சங்கீத சம்ராட் செம்பை வைத்தியநாத பாகவதர் | —பாட்டு |
| | சங்கீத ரத்ன டி. சௌடைய்யா | —பிடில் |
| | இராமநாதபுரம் முருகபூபதி | —மிருதங்கம் |
| | ஆலங்குடி ராமச்சந்திரன் | —கடம் |
| 25-12-1944 மாலை 4 மணிக்கு | மைலம் பி. வஜ்ஜிரவேலு முதலியார் | —பாட்டு |
| | கும்பகோணம் சிவவடிவேலுப் பிள்ளை | —பிடில் |
| | சென்னை ஏ. கண்ணன் | —மிருதங்கம் |
| மாலை 6 மணிக்கு | இசைவாணர் எம். கே. தியாகராஜ பாகவதர் | —பாட்டு |
| | டி. குருராஜப்பா | —பிடில் |
| | குற்றாலம் சிவவடிவேல் பிள்ளை | —மிருதங்கம் |
| | பாலக்காடு வில்வாத்திரி ஐயர் | —கடம் |
| | மன்னார்குடி நடேசம் பிள்ளை | —மோர்சிங் |
| 26-12-1944 மாலை 4 மணிக்கு | திருவாரூர் டி. வி. நமச்சிவாயம் | —பாட்டு |
| | லால்குடி நீலமேகம் பிள்ளை | —பிடில் |
| | காரைக்கால் பாலுப் பிள்ளை | —மிருதங்கம் |
| மாலை 6 மணிக்கு | எட்டயபுரம் சமஸ்தான வித்வான் இசையரசு எம். எம். தண்டபாணி தேசிகர் | —பாட்டு |
| | திருவாங்கூர் சமஸ்தான வித்வான் கும்பகோணம் இராஜமாணிக்கம் பிள்ளை | —பிடில் |
| | திருவாங்கூர் சமஸ்தான வித்வான் பழனி சுப்பிரமணியம் பிள்ளை | —மிருதங்கம் |
| 27-12-1944 மாலை 4 மணிக்கு | திருமதி பி. ஆர். திலகம் | —பாட்டு |
| | பாபநாசம் பால ஸரஸ்வதி | —பிடில் |
| | எஸ். பி. ஹம்ஸதமயந்தி | —மிருதங்கம் |
| மாலை 6 மணிக்கு | திருமதி பாலசரஸ்வதி | —பரதநாட்டியம் |
| 28-12-1944 மாலை 4 மணிக்கு | சிதம்பரம் ஜெயராம் பிள்ளை | —பாட்டு |
| | தஞ்சாவூர் சந்தானமய்யர் | —பிடில் |
| | காரைக்கால் பாலு | —மிருதங்கம் |
| மாலை 6 மணிக்கு | திருமதி கோகிலத்வனி என். ஸி. வஸந்தகோகிலம் | —பாட்டு |
| | திருவாளபுத்தூர் கிருஷ்ணமூர்த்தி பிள்ளை | —பிடில் |
| | இராமநாதபுரம் ஈஸ்வரன் | —மிருதங்கம் |
| 29-12-1944 மாலை 4 மணிக்கு | தேரழுந்தூர் சீனிவாசாச்சாரியார் | —பாட்டு |
| | கும்பகோணம் டி. பஞ்சாபிகேசன் | —பிடில் |
| | கண்டனூர் சுப்பராமன் | —மிருதங்கம் |
| மாலை 6 மணிக்கு | திருப்பாம்புரம் டி. என். சுவாமிநாத பிள்ளை | —புல்லாங்குழல் |
| | ஆவாரம் வெங்கடசாமி நாயுடு | —பிடில் |
| | தஞ்சாவூர் இராமதாஸ் ராவ் | —மிருதங்கம் |

| | | |
|---|---|---|
| 30-12-1944 | மன்னார்குடி கே. சாவித்திரி | —கோட்டு வாத்தியம் |
| மாலை 4 மணிக்கு | திருவீழிமிழலை சுப்பிரமணியம் பிள்ளை | —பிடில் |
| | திருத்துறைப்பூண்டி கிருஷ்ணமூர்த்தி | —மிருதங்கம் |
| மாலை 6 மணிக்கு | கானகலாதர மதுரை மணி ஐயர் | —பாட்டு |
| | திருவாங்கூர் சமஸ்தான வித்வான் கும்பகோணம் ராஜமாணிக்கம் பிள்ளை | —பிடில் |
| | திருவாங்கூர் சமஸ்தான வித்வான் பழநி சுப்பிரமணியம் பிள்ளை | —மிருதங்கம் |
| 31-12-1944 | கலைவாணி எம். எல். வசந்த குமாரி | —பாட்டு |
| மாலை 4 மணிக்கு | கடலூர் இராஜம் ஐயர் | —பிடில் |
| | தஞ்சாவூர் கிருஷ்ணமூர்த்தி ராவ் | —மிருதங்கம் |
| மாலை 6 மணிக்கு | திருவாங்கூர் ஆஸ்தான வித்வான் ஜி. என். பாலசுப்பிரமணியம் | —பாட்டு |
| | திருவாங்கூர் சமஸ்தான வித்வான் கும்பகோணம் இராஜமாணிக்கம் பிள்ளை | —பிடில் |
| | திருவாங்கூர் சமஸ்தான வித்வான் பாலக்காடு மணி ஐயர் | —மிருதங்கம் |
| | சென்னை வேணு நாயக்கர் | —கஞ்சிரா |
| 1-1-1945 | கே. பி. கிட்டப்பா | —பாட்டு |
| மாலை 4 மணிக்கு | தஞ்சாவூர் சிவானந்தம் | —வீணை |
| | தஞ்சாவூர் இராமதாஸ் ராவ் | —மிருதங்கம் |
| மாலை 6 மணிக்கு | திருமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி | —பாட்டு |
| | டி. டி. சங்கர ஐயர் | —பிடில் |
| | கல்பாத்தி இராமனுஜன் | —மிருதங்கம் |
| | சென்னை வேணு நாயக்கர் | —கஞ்சிரா |
| 2-1-1945 | மாலை 4 மணிக்கு நடன கலாமணி ஏ. என். பெரிய நாயகி | -பரதநாட்டியம் |
| மாலை 6 மணிக்கு | இயல் இசை புலவர் சீவலூர் மீனாக்ஷி சுந்தரம் பிள்ளை | -பாட்டு |
| | சேலம் விஸ்வநாத சர்மா | —பிடில் |
| | குற்றாலம் சிவவடிவேல் பிள்ளை | —மிருதங்கம் |
| | மன்னார்குடி வைத்தியலிங்கம் பிள்ளை | —கொன்னக்கோல் |
| 3-1-1945 | மதுரகான ஸ்ரீமதி என். ஏ. சுந்தரம் | —பாட்டு |
| மாலை 4 மணிக்கு | கும்பகோணம் ஜி. சீனிவாச அய்யங்கார் | —பிடில் |
| | காஞ்சிவரம் வீராச்சாமி | —மிருதங்கம் |
| | காஞ்சிவரம் வேலாயுத முதலியார் | —கஞ்சிரா |
| மாலை 6 மணிக்கு | திருவாங்கூர் ஆஸ்தான வித்வான் பி. எஸ். வீருசாமி பிள்ளை, டி. என். ஆர். நடராஜ சுந்தரம் பிள்ளை | —நாதஸ்வரம் |
| | தவுல் அரசு நீடாமங்கலம் மீனாக்ஷி சுந்தரம் பிள்ளை | —தவுல் |

## நிகழ்ச்சிகள் மாற்றத்திற்குரியன

கட்டணம் :—சீசன் டிக்கட் முதல் வகுப்பு ரூ. 32-0-0 இரண்டாம் வகுப்பு ரூ. 24-0-0 மூன்றாம் வகுப்பு ரூ. 12-0-0

சீசன் டிக்கட்டுகள் 20-12-44வ வரை கீழ்க்கண்ட இடங்களில் கிடைக்கும்.

1. தமிழ் இசைச் சங்கம், 8/9, சிங்கண்ண நாயக்கன் தெரு
2. ஜி. கே. சேல் அன் கம்பெனி, 23, மவுண்டு ரோடு
3. வாணி பார்மசி, 137, பிராடீஸ் ரோடு, மைலாப்பூர்
4. தமிழ்ப்பண்ணை, பனகால் பார்க், தியாகராயநகர்
4. பார்க்கர் அன் கம்பெனி, 127, புரசவாக்கம் ஹைரோட்
6. 269-270, திருவல்லிக்கேணி ஹைரோட்

---

முதல் வகுப்பு சீசன் டிக்கட்டு வாங்குபவர்கள் சங்கக் காரியாலயத்தில் ரூ. 5 தனிக் கட்டணம் கட்டி ஒரு சீட் ரிசர்வ் செய்து கொள்ளலாம்.

ஆதரவாளர்கள் குறைந்த கட்டணத்தில் சீசன் டிக்கட்டுகள் வாங்க வேண்டுமானால் சங்கக் காரியாலயத்தில் மட்டும் பெற்றுக் கொள்ளலாம்.



## நாகரிகத்திற்கேற்ற
## கண்ணைக்கவரும்
## ஆடைகள்

புடவைகள்

**அருணா புடவைகள்**

நீடித்த சாயத்துடன் கூடிய பட்டு வேலைப் பாடுகள் நிறைந்தவை

நேர்த்தியான
வேஷ்டிகள்

**அருணா வேஷ்டிகள்**

அழகிய பார்டருடன் கூடிய நேர்த்தியான ரகங்கள்

விதவிதமான
ஷர்ட்டிங்

**அருணா ஷர்டிங்ஸ்**

கண்ணைக் கவரும் கலர் களில் சோபையான தினுசுகள்

மிருதுவான
பாப்லின்

**அருணா பாப்லின்கள்**

தேஜோமயமான வானவில் கலரில்

# அருணா

மில்ஸ்; லிமிடெட்
ஆமதாபாத்.



## வடமேற்கு இந்தியாவில் —
## தேநீர் அருந்தும் நேரம்

சிந்துவின் மேற்கே, வாழ்க்கை அங்குள்ள பாறைகளைப்போல அவ்வளவு கடினம். பகலில் செய்யும் வேலையிலோ அல்லது இரவில் நடத்தும் காவலிலோ அபாயம் உண்டு என்பது அங்குள்ள பதான்களுக்கும் பலுசிகளுக்கும் நன்கு தெரியும்.

முக்கியமாக, பிரயாணஞ் செய்யும் பொழுதெல்லாம் நெருப்பு மூட்டிக் கொண்டு வெட்ட வெளியில் காவல் இருக்க வேண்டிய அவசியம் இவர்களுக்கு ஏற்படுவது உண்டு. கண் விழித்துக் காவலைச் சரியாகச் செய்யும் பொருட்டு உஷ்ணமான தேநீரைச் சர்க்கரை பாலுடன் மொத்தமாகக் கலந்து பித்தளை லோட்டாக்களில் சப்பிச் சப்பிச் சாப்பிடுவது அங்குள்ளவர்களுக்கு வழக்கம். தேநீர், இரவில் அடிக்கும் சரக் காற்றிலிருந்து பாது காத்துத் தனியாக இருந்து காவல் காக்கும் ஒருவனுக்கு உத்சாகத்தையும் ஊட்டுகிறது.

இந்த நாட்டிலும் எங்கே பார்த்தாலும், மற்றப் பிரதேசங்களி லிருப்பதுபோலவே, புத்தம் புதிய ப்ரூக்பாண்ட் தேயிலை புகழுடன் நடமாடுகிறது.

# ப்ரூக் பாண்ட்

"இது இலையும் ஒரு மொட்டும்"






வினோலியா உபயோகித்து ஸ்நானம் செய்தால் குளிர்ச்சி உண்டாகும் போது நீங்கள் ஏன் வெப்பத்தினால் கஷ்டப்பட வேண்டும். இந்த சோப் பின் வெண்ணிறம் வாய்ந்த நுரை உங்களை சுத்தமாக்கும் பொழுது ஏன் வியர்வையுடன் இருக்கவேண்டும். வினோலியா சோப்பின் வாசனை சுறு சுறுப்பையும், உத்ஸாகத்தையும் உண்டுபண்ணி, மனதிற்கு சுகத்தை யும் அளிக்கிறது.

# வினோலியா ஒயிட் ரோஸ் ஸோப்பு




VINOLIA CO. LIMITED, LONDON, ENGLAND